# தேம்பாவணி ஆராய்ச்சி



ஆக்கியோர்
**ஜே. ஜி. சுந்தரம்,**
முன்னாள் தலைமைத் தமிழாசிரியர்,
கால்ட்வெல் உயர்நிலை பள்ளி, தூத்துக்குடி.



**தமிழ் இலக்கியக் கழகம்,**
தூத்துக்குடி.
**1959.**

 [விலை — 75 ந.பை.

# பதிப்புரை

---

தமிழ் இலக்கியச் சோலையில் தலைசிறந்து நிற்கும் நூற் ஒன்று, வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணி எனும் யம். இந்நூலை கல்லாதார் கற்றுணரத்தக்க பொருளையும், ணர்ந்தோர் களிக்கத் தக்க கருத்தையும் எடுத்துரைக்கும் யில் சீரிய தமிழில் வரையப்பட்டுள்ளது இவ்வாராய்ச்சி தேம்பாவணியின் பொருட்சுவை, சொற்சுவை, கருத்துச் இலக்கியச் சுவை யாவற்றையும் ஒருங்கே திரட்டி பதோர் விருந்தாக அளிப்பது இச்சிறிய நூல்.

கடின சொற்கள் பல இருப்பினும் படிப்பதற்கு இன்பந் பனவாயிருப்பதை வாசிப்போர் உணர்வர். பிற மொழி த் தமிழில் பெயர்த்தெழுதுங்கால் ஒரே சொல்லைப் வேறு முறையில் எழுதுவதை ஆசிரியர் ஆதரிப்பதாகவும் ிந்து கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, சேசு, யேசு, பசு என்ற பதங்கள்.

இவ்வாறு தேம்பாவணியில் புதைந்து மறைந்து கிடந்த ல்வத்தைத் தோண்டி எடுத்து உதவும் இந் நூலை தமிழ் கள் பயின்று பயனடைவார்களென நம்புகிறோம். வ்வரிய நூலை முதன் முதல் வெளியிட்ட யேசு சபை R. ஞானப்பிரகாச சுவாமி அவர்கள், தமிழ் இலக்கியக் ச் சார்பில் இந்நூல் தமிழ் உலகில் பரந்து உலவ உதவிய 5 இக்கழகம் சுவாமி அவர்களுக்குப் பெரிதும் கடமைப் டுள்ளது.

**தமிழ் இலக்கியக் கழகம்.**

# உள்ளுறை

# முகவுரை.

---

இந்நூல் 'தேம்பாவணியின் சிறப்பு' என்ற தலைப்பின்கீழ் 1944-ம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 19.ம் தேதி ஞாயிற்றுக் கிழமை தூத்துக்குடித் தமிழாசிரியர் கழக ஆதரவில் நடந்த வீரமாமுனிவர் விழாவின்போது, மேற்படி சங்கத் தலைவரும் தூத்துக்குடி கால்டுவெல் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியருமான ஜே. ஜி. சுந்தரம், தூத்துக்குடி அர்ச். சவேரியார் உயர்நிலைப்பள்ளிமண்டபத்தில் திரு.பண்டித M.P.மஸ்கரேனஸ் தலைமையின்கீழ் நிகழ்த்திய சொற்பொழிவின் விரிவு. இது பலநண்பர்கள் பரிவின் விடுத்த வேண்டல்களாலும், சிறப்பாக, தூத்துக்குடி, சேசுசபை சங். ஞானப்பிரகாச சுவாமியாரவர்களது தூண்டுதலாலும்; சொற்பொழிவாளரால் எழுதப்பெற்றது.

# தந்துரை.

'தேம்பாவணி ஆராய்ச்சி' தேம்பாவணி யெனும் அரும் பெருங் காப்பியத்தின் சிறப்பியல்புகளை எடுத்துக் காட்டும் சிறியதோர் நூல். இஃது, தூத்துக்குடியில் 1944-ம் வருடத்தில் நடைபெற்ற முனிவரின் வருடாந்தர பொதுக்கூட்டத்தில் தமிழ் ஆசிரியர் திரு. ஜே. ஜி. சுந்தரம் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் பெருக்காகும். ஒருமுறை காதாரக் கேட்ட இனிய கருத்துக்களைக் கண்ணுர புத்தக உருவாக்கிப் பன்முறை வாசிக்க விரும்பிய பல புலவர் எண்ணத்திற்கு இயைய அச்சில் ஏற்றப்பட்டது.

இவ்வித நூல் சேசு சபைத் தைரியநாத பெஸ்கி சுவாமிகளாம் வீரமாமுனிவர் இயற்றிய காப்பிய நூலைச் சகலரும் ஆவலுடன் படிக்கத் தூண்டுகோலாகும். சொல்நயம் பொருள் நயம் நிறைந்த தேம்பாவணி இலக்கியப் பண்பில் ஏனைய காவியங்களுக்குத் தாழ்ந்ததாகாதென்றும், பற்பல துறைகளில் அவற்றினும் ஒருபடி உயர்ந்ததே யென்றும் கற்ருேர் புகழப் பல்வேறு காரணங்கள் உள. அவற்றினுள் ஒன்று, மேனுட்டு மொழிகளில் திகழும் சிறந்த இலக்கியங்களைக் கற்று ஆய்ந்த பின், நந்தமிழ்ப் பனுவல்களை ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்த ஞானி, தமிழ்ப்பாடை ஒன்றிலே சாமர்த்தியம் படைத்த அறிவாளிகளுக்குப் புலப்படாத நுட்ப திட்பங்களையோ நூதனச் சிறப்புகளையோ கண்டு தந்நூலில் திறம்பட ஒளிபெற அமைத்துள்ளாரென்பது. இத் 'தேம்பாவணி ஆராய்ச்சி'யை வாசிப்போர் இதன் உண்மையை எளிதில் உணர்வார்.

இத்தகைய நூற்களே, விலையேறப்பெற்ற மணிகள் தேம்பாவணியில் புதைந்துகிடக்கின்றன எனக்காட்டும். அவை வெளி தோன்ருத காரணத்தால், அக்காப்பியத்திற்கு உரிய

மதிப்பு தரப்படாமல் இருக்கிறது. ஆதலின், அதில் குவிந்துள்ளவற்றைச் சகலருங் காணப் பரப்புவது அவசியம். அவ்வலுவலுக்குத் தேவையான அறிவும் தெளிவும் வாய்ந்த புலவர்கள் சிலரே. இவர்கள் தொகையில் சேர்ந்தவர் திரு. ஜே. ஜி. சுந்தரம் என்பதை, முனிவர் விழாவன்று அவர் ஆற்றிய சொற்பொழிவு பலருக்கு வெளியாக்கியது; இனி அவர் வரைந்த நூல் தமிழுலகிற்கே பிரசித்தப்படுத்தும்.

மேலும், புலன்கள் களிக்கும் நயனையும், புத்தி நாடும் சத்தியத்தையுமன்றி, உத்தம சன்மார்க்க மெய்ம்மறைப் போதனையையும் தேம்பாவணி தன்னகத்துள் அடக்கியுளது என்பது இந்நூலிலிருந்து அறியலாம்.

இனி இந்நூலின் சிறந்த ஆசிரியரோ, இவரைப்போன்றவர்களோ, தேம்பாவணியில் அதிக ஆழ்ந்த ஆராய்ச்சி புரிந்து, விரைவில் பெரும் நூலொன்று தமிழுலகம் களிக்க இயற்றித் தர திரியேகநாதர் அருள்புரிவாராக!

R. ஞானப்பிரகாசம், சே. ச.
இரண்டாம் பதிப்பு 1959.

# தேம்பாவணி ஆராய்ச்சி

## ஆசிரியர்

திருமலிந்த தேம்பாவணி எனுஞ் சீரிய காவிய ஆசிரியர் தமிழரல்லர். இவர் இத்தலி நாட்டிற் பிறந்து, இன்றமிழ் நாடு போந்து, தமிழிலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்து, எம்மொழிப் புலவரும் வியக்குமாறு நம் மொழியிலோர் போற்றரு காவியம் சாற்றிப் புகழுற்றுரெனின், இவர்தம் புலமையின் பெருமையும், முயற்சியின் அருமையும் என்னே! என்னே!! கி. பி. 1680-ம் ஆண்டிற் பிறந்து, 1711-ல் தமிழ்நாடு புகுந்து, 1726-ம் ஆண்டில் கூம்பாமலர் அணியின் தேம்பாவணியாந் தீஞ்சுவைக் காவியத்தை யருளிய கவிஞர் பெருமானின் இயற்பெயர் கான்ஸ்டான்ஷியுஸ் பெஸ்கி (Constantius Joseph Beschi, S. J.,) என்பது. வீரமாமுனிவர், தைரியநாதர் (Constantius) என்பன இவரது வேறு பெயர்களாம். தமிழ் எழுத்துக்களைச் சீர்ப்படுத்தியமையும், அகராதி ஆக்கினமையும் வசன நூல்கள் வரைந்தமையும் இன்னவர் ஆற்றியனவும் எவரும் ஆற்றகில்லாதனவுமாகிய அரிய புதிய தொண்டுகளாம். பின்னும் இலக்கண நூல்கள் பல இயற்றியும், மத சம்பந்தமான பிரபந்த நூல்கள் பல எழுதியும் புகழ் மணம் பூத்த இம்மாபெரு முனிவர் மரித்த ஆண்டு 1747.

## காவியஞ் செய்த நோக்கம்

கருவிலே கவியாகுந் திருவுடையராய்ப் பிறந்து, அத்திருவினுக் கேற்பப் புலமை விருத்தியும் பெற்று, போதிய தமிழ் மொழிப்பற்றும், தண்டமிழ் மொழி தனக்களித்த இன்பத்தை அண்டையில் உள்ளோர்க்கும் அளிக்க அவாவும் பிறர் நலப்பற்றும் வாய்ந்த பெற்றியராய் விளங்கிய வீரமா முனிவரின் பண்பட்ட மனத்தினின்று, உரிய காலத்தில்

இக்காவியம் உதயமாயிற்று. அவரது நெஞ்சின்கண் நிகழ்ந்த இடிப்பும், வாய் துடித்த துடிப்பும் அவரை வாளா இருக்கவிட வில்லை. பாயிரத்து நான்காம் செய்யுளில் "ஆசையுற்று ஊமனேனும் அருங்கதை அறையலுற்றேன்" என்றுர். இவ்வாறே கம்பர் போன்ற வீறுடைக் கவிகளும் ஆசை பற்றியே அறையலாயினர். கவிஞன் மனக்கமலத்தினின் றெழும் ஆசை ஒன்றன்று; பலவாம். அவ்வாசையே இக்காவியம் எழ அமைந்த அடிப்படை நோக்கம் என்க. இது காரணம் பற்றியே வீரமாமுனிவர் காவியங் கண்டமை 36/133ல் 'விருப்பந் தூண்டத் துணிந்தணிந்தேன்' என்னுங் கூற்றினுனும் வலியுறுகின்றது. (36, படலத்தையும் 133, கவியையும் குறிக்கும் எண்கள். இவ்வாறே, பிறுண்டும் கண்டு கொள்க)

வீரமாமுனிவர் சேசுசபைக் குருக்களில் ஒருவர். அவர் பாயிரம் முதலாம் செய்யுளிலேயே, எடுத்த வாயினுலே, "வளன் தன்காதை அறமுதல் விளங்கச் சொல்வாம்" என்றுர். எனவே கிறிஸ்தவ தர்மங்களை இந்திய மக்கள் யாவரும் அறிய வேண்டும் என்பதூஉம் 36/133ல் "மருவாய் மணிப்பூம் வயல் நாடு வடுவற்றுய்ய ஈங்குற்றேன்" என்றமையால், வடுவற்ற கிறிஸ்தவ தர்மங்களைக் கடைப்பிடித்து இந்நாட்டினர் யாவரும் உய்தல் வேண்டுமென்பதூஉம், முனிவர் பெருமானின் நோக் கங்களாகும். தவிர இந்நூலுணர்வார் அடைதலாகும் பயன் குறித்துப் பகருமிடத்தே, 36/132ல் "தேம்பாவணி யிஃதை யணிவார் திருவீட்டுயர்வார்" என்று ராகலின், மக்கள் யாவ ரும் நல்லறங்களின் வாயிலாக வீடடைந்து இன்பந்துய்த்தல் வேண்டுமென்ற உயரிய நோக்கங்கொண்டே இக்காவியத்தைப் பாடினுர் என்பது அறியக்கிடக்கின்றது.

மதநெறிக்கண் நின்று தொண்டாற்றிய புத்த சமணத் துறவிகள் பல்வேறு இலக்கிய இலக்கணங்களை ஆக்கி, அவ் வந் நூல்கள் வாயிலாகத் தம் மதக் கொள்கைகளை மக்களிடை பரவச் செய்த முறையினை வீரமாமுனிவரும் பின்பற்றினர் எனக்கூறின், பிழையன்று.

## காவியத்தின் நடை

வீரமாமுனிவர் தம் காவியம் சீரிய செந்தமிழ் நடை வாய்ந்தது. வட சொற்கள் ஆங்காங்கேவரினும், தனித் தமிழ்ச் சொற்களே பயின்ற நிலையில், சிந்தாமணியே போன்று சிந்தை மகிழ்வுறச் செய்யும் செவ்விய நடைவாய்ந்தது. முனிவர் மொழிகளைப் புணர்த்துவதிலும், சந்தி பிரித்துப் பல பொருள்கள் காட்டுவதிலும், சமயோசிதம் போலவும் உருவகக் கோடன் முறையானும் பலவேறு அர்த்தங்கள் பிணைப்பதிலும் மிக்க சதுரம் படைத்தவராகலின், ஒரோவிடங்களில் செய்யுட்கள் மிகக் கடினநடை உடையனவாகத் தோன்றற் பாலன. சிற்சில கவிகளுக்கு, ஆசிரியர் காலத்திலேயே எழுதப்பெற்ற பொழிப்புரை இல்லாவிடத்துப் பொருளுணர்வது அரிதெனப்படும். பொருள் புரிந்த பின்னரோ நமது மடமைக்கும் அவரது புலமைக்கும் இடையிட்ட ஏற்றப்பெற்றி நோக்கி இன்புறலாம்.

தேம்பாவணி ஆசிரியர், சிந்தாமணியின்மேல் மிகவும் பற்றுடையாரெனவும், அந்நூலின் நடையை யொட்டியே காவியம் வரைந்தார் எனவும் பெரியார் கூறுவர். பல நூல்களையும் படித்துப் பயனுற்ற செந்நாப்புலவன் ஒருவன் தான் புதிதாக எழுதத் துணிந்ததோர் காவியத்தின்கண் அவனது விருப்பத்திற்கு இயைந்த சில நூல்களின் நடைப்போக்கு அமைவது இயற்கையே. தேம்பாவணியில் சிந்தாமணி நடைச் செய்யுளுமுண்டு, கம்ப ராமாயண நடைச் செய்யுளுமுண்டு. எடுத்துக் காட்டாக ஒவ்வொன்று காட்டுதும்.

''தூமஞ் சூடிய தூத்துகி லேந்தல்குல்
தாமஞ் சூடிய வேற்றடங் கண்ணினுள்
நாமஞ் சூடிய நன்னுதல் நீட்டினுள்
காமஞ் சூடிய கண்ணொளிர் சுண்ணமே'' :

"தூமஞ் சூடிய தூய்துகி லேந்துபு
தாமஞ் சூடிய தாரொடு பூண்மலி
காமஞ் சூடிய காந்தரி யென்றொரு
நாமஞ் சூடிய நாரியைக் கண்டுளார்"

முதற் செய்யுள் சிந்தாமணி 875வது செய்யுள். பிந்திய செய்யுள் தேம்பாவணி 10/27ல் உளது. இரண்டு செய்யுட்களும் ஒவ்வொரு பெண்ணை வருணிப்பனவே. பெண் வருணனை ஒன்றினை மனோகற்பனையின்பால் படுத்தின், காமமும் தாமமும் தூமமும் கருத்தில் தோன்றத் தக்கனவேயன்றோ! சிந்தாமணியாம் காவியக் கடலைக் குடித்து அதிலே ஊறித் திளைத்திருந்த முனிவருக்கு மனச் சட்டியில் உள்ளது, வாய் அகப்பையில், தானே வந்து விழுகிறது.

"தாயொக்கு மன்பில் தவமொக்கும் நலம்ப யப்பில்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னில் மருந்தொக்கும் நுணங்கு கேள்வி
ஆயப்பு குங்கால் அறிவொக்கும் எவர்க்கு மன்னன்'

கம்பர்-பாலகாண்டம். அ.ப. 4

நோயு மொக்குமேல் நுகர்ந்துயிர் தருமருந் தொக்கும்
பேயு மொக்குமேல் வெற்றியைப் பெறும்படை யொக்கும்
தீயு மொக்குமேல் தீர்த்தருஞ் செல்கதி யுய்க்கும்
தாயு மொக்குமே தருமன்அன் புய்க்கும்இந் நாமம்".

தேம்பாவணி 11/98

"நோயொக்கு மவர்க்கின்ப நுனித்தவுயிர் மருந்தொக்
தீயொக்கும்......தாயொக்கும் அத்திருவோன்" [கும்

தேம்பாவணி 34/40

"தாயே யொக்கஅருந்தயை யொக்கும்அரு
நோயே யொக்கமருந்தினை யொக்கும்நுழை
பேயே யொக்க......துணை ஒக்குமிவன்"

தேம்பாவணி 36/45

இச்செய்யுட்களிலெல்லாம் கம்பரது வாக்கும் வாக்கினது போக்கும் ஒன்றித்துச் செல்கின்றன. இம்மூன்றும் கம்பரது செய்யுளோடொப்ப, அருந்திறல் அன்பின் சேசுவையும் சூசையையும், குணவிசேடங்காட்டுவான் விழுந்த செய்யுட்கள். எனவே, முனிவர் கம்பராமாயணத்தையும் கசடறக்கற்றுத் தேர்ந்ததன் பயனைக் கம்பனது நடையையும் கைப்பற்றிக் கொண்டமை புலனாவதன்றோ? இங்ஙனம் ஆராயப்புகின் வீரமாமுனிவரது காவியத்தின்கண் ஊன்றி விளங்கும் சொன்னடையும் தொடை நடையும் எத்துணை உளவோ அறியோம். இறுதியாக ஒன்று கூறலாம். முதல் முதல் விருத்தப்பா வீறு பெற்றெழுந்தது சீவக சிந்தாமணி ஆக்கியோன் திருத்தக்க தேவராலேயே, அதன் பின்னர் அது கம்பரால் வீறு பெற்றெழுந்தது. பின்னர் புராணங்கள் எழுதிய புலவர்களால் அதன் வீறு குறைந்தது எனின் குற்றமாகாது. சந்தம் வீறு பெற்றெழுந்தது வில்லிப்புத்தூர் ஆழ்வாராலேயே. ஆனால் அன்னவராலும் அருணகிரிநாதராலும் அது வடமொழிக்கலப்பு மிக்குடையதாய் விளங்கிப் போந்தது. வீரமாமுனிவரோ விருத்தத்தையும் சந்தத்தையும் ஒருங்கே வீறு பெறச்செய்த உத்தம கவியாவர் என்பதில் ஐயமில்லை. இதைத் தமிழ்ப் பெரும் புலவர்களும் இன்னமும் அறியாத நிலையில், தேம்பாவணியாங் காவியத்தைத் தெள்ளத் தெளியப் பயிலாதிருப்பது மிகவுப் பரிவுறத்தக்கதொன்றே.

வீரமாமுனிவர் சிலப்பதிகார நடையையும் புகுத்தியுள்ளார். சிலப்பதிகாரம்ஒன்றே இயல் இசை நாடகமெனும் மூவுறுப்புகளையும் உடையது. அங்குள்ள வரிப்பாடல்கள் இசைப் பகுதியோடு இயைந்தது. முனிவரும் தம் காவியத்தில் இடையிடையே இசையையும் புகுத்தியுள்ளார் என்பது போதரும்: 12 80–82, 14 88–90, 15 183–185, 19 18–21, 32 48–51

முதலியனவும் பிறவும் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வந்தன. இவை பெரும்பாலும் வெண்செந்துறைகளாய்வருவன. அடிகள் இவைகளைப் பாட்டுகள் என்றே உரைத்து, அவண் முன்னைய சந்தத்தையும் நிறுத்தி இசைக்கியைந்த சந்தத்தில் அடுக்குச் சொற்கள் தொடுத்து வரப்பாடுகின்றார். இதனை நோக்கும் பொழுது இவர் சிலப்பதிகார ஆசிரியரை ஒருவாறு பின்பற்றி, இசையையும் புகுத்தினர் என்று கோடலே பொருந்துமென்க.

## முதனூல்

பாயிரம் ஏழாவது கவிமுதல் பன்னிரண்டாவது கவியுட் பட, முனிவர் முதனூல் வரலாற்றை மொழியாநிற்பர். "ஆகிர்த நகரின் கண் வாழ்ந்தவளும், தூய கன்னியாய் மரி என்னும் நாமம் புணைந்தவளுமாகிய ஒருத்திக்குச் சூசையின் கன்னித் துணைவி களித்திசைத்த நூல் இஃது" என்றார். அவ்வம்மை யார் எழுதிய நூலைத் தமிழ் மரபை யொட்டி எழுதினர் முனிவர் பெருமான்.

எனவே, இதற்கும் முதனூலுக்கும் இடையிட்ட பல பேதங் கள் இருக்கலாம். வேற்றுமொழியினின்று இதனை மொழி பெயர்க்குங்காலையில், சொல்வளமிகுந்து அகராதி தொகுத்த அடிகளும் "வரைந்தவை வரைந்து காட்டத் திருந்திய தமிழ்ச் சொல் இல்லேன்" என்று இடர்ப்படுகின்றனர். இது முனிவர் மாட்டு சிறுபான்மை உண்மையேனும் பெரும்பான்மை அவை யடக்கக் கூற்றேயாகும். ஏனெனில், இது மொழி பெயர்ப்பு நூலென்று எவரேனும் எண்ணுவாறு இனிய நடையால் தட்டுத் தடையின்றிச் சென்று நைடதம் போலன்றி முதலும் ஈறும் ஒப்ப முடிகிறது.

முதனூற்கண் பொருளின் வைப்புமுறை எவ்வா றுளதோ அறியேம். ஆனல் ஆசிரியர் தமிழ் நூல் முறைப் படி நாட்டுப்படலத்தோடு நவிலத் தொடங்கி, மங்கலகரமான முடிசூட்டுப் படலத்தோடு நூலை முடிக்கின்றார். நாடு, நகர வருணனைகள் பெரும்பாலும் தமிழ் மரபைத் தழுவியே செல்

கின்றன ஐந்திணைப் பகுப்பும் திணைமயக்கமும் கூறுவர். நிலத்தின் மர இனங்களும் பயிர்வகைகளும் தமிழ் நிலத்திற் குரியனவே. சோலைகளையும் சோலைகளில் வாழ் பறவைகளையும் தமிழ் மயமே ஆக்கினர். கதை சம்பந்தமான ஆட்கள், பலருடைய பெயர்களையும் நம் நாட்டுப் பெயர்களாகவே திரித்துக்கொண்டமை போதரும். வளன், வாமன், சிவாசிவன் அறஞ்சயன், காந்தரி, நகுலன் முதலிய பெயர்கள் தக்க சான்றுகளாகும். மேலும் சுவாமிகள் 12/23–26 ல் கூறுகின்ற 'புருவும் வேடனும்' என்ற கதையும், 23/110 ல் கூறும் சுரு மீன் உவமையும் முதனூலோடு பட்டனவல்ல எனக் கருதற் பாலனவாம். முதனூலை யாமறியாத நிலையில் ஒரு தலையான் ஒன்றும் உரைப்பதற்கில்லை. ஆசிரியர் தமிழிற் கண்ட பெருங் காப்பிய நிலைகளெல்லாம் பொருந்த, தமிழ் மக்கள் யாவரும் இதனை விரும்பிப் பயிலவேண்டி, தமிழ் மரபுகளைத் தழுவுமிட மெல்லாந் தழுவியும், முதனூலுக்குப் பழுதுருமலும் எழுதிப் போந்தார் என்றலோடு நிறுத்துதும்.

## நூற் பெயர்.

பாயிரம் 13ம் செய்யுளில் "வேரியங் கொடியோன் காதை தேம்பாவணி யெனப் பிணித்தல் செய்வாம்" என்றும், 36/132ல், "கன்னித்துணைவி களித்திசைத்த தேம்பாவணி இஃது" என்றும் கூறுகின்றமையின், முனிவர் இந்நூலுக்கிட்ட பெயர் தேம்பாவணியே. தேம்பா அணி எனப் பிரித்து வாடாத மாலை என்றேனும், தேன் பா அணி எனப் பிரித்து தேன் போன்ற பாக்களின் வரிசை யென்றேனும் பொருள் படுத்தலாம்.

மக்களது ஆன்ம அசடுகளை மாற்றி, ஆன்மாவை வளமுறுத்த வல்ல வாடாத மாலையாய் இக்காவியம் விளங்கல் வேண்டும் என்பது கவிஞரின் கருத்தாகும். அங்ஙனம் மக்கள் எஞ்ஞான்றும் வாடாத மாலையாகத் தம் மார்பில் அணியத்தக்க இக்காவியத்தின் நாயகனையும் நாயகியையும் தேம்பாவணி யென்னும் சிறப்புப் பெயரான் அலங்கரித்துள்ளார். 3/57ல், சூசையின் தாயாகிய நீப்பி என்பவள் அக்குழந்தையைக் கட

வுள் பாதத்தில் படைத்து வணங்காநிற்புழி, கடவுளானவர் அசரீயாய்த் தோன்றி ஆசீர்வதித்தார் என்றும், அதுகாலையில் ஆகாயத்தில் "ஆடாநிலையறத்து என் மார்பில் தேம்பாவணி ஆவான் வாடா அருள்மகன்" என்று ஒரு சத்தம் கேட்டது என்றும் அறியக்கிடக்கின்றது. 3/59ல் சூசை என்னுங் குழந்தையைச் சூழ்ந்து நின்ற உறவினரும் பிறரும் அதைத் "தேம்பாவணியே" என்று வாழ்த்தினர் என்றார். தவிர, சூசையே மரியம்மையாருக்குக் கடவுள் நியமித்த கணவன் என்பது அடையாளம் மூலமாக அறிந்துழி, தேவாலயத்தின்கண்ணிருந்த சிமியோன் முதலிய பக்தர்கள் வியந்து,

"நாம்பா வணிநம் பியைநல் கிடவோர்
தேம்பா வணியாங் கொடிசேர்த் தனனென்றார்."5/106

இளையாத அழகு வாய்ந்த நம்பியாகிய சூசைக்கு இவளே மனைவியென்பதைக் காட்ட இவனது கோலோடு தேம்பாவணியாங் கொடியைக் கடவுள் அடையாளமாகத் தந்தார் என்றும், சூசையை உயிர்த் துணையாயிருந்து காக்க, தேம்பாவணியாங் கொடி போன்ற இக்கன்னியைக் கடவுள் திருமணத்தால் சேர்த்தார் என்றும் கவர் பொருள்பட அப்பக்தர்கள் கழறினர்கள். எனவே, முனிவர் தாம் காவியத்திற்கு இட்ட பெயரையே சூசைமரியருக்கும் ஈந்து, இக்காவியம் முழுமையையும் தேம்பாவணி ஆக்கினமை மிகவும் போற்றற் குரித்தே.

## நூற்பொருள் வைப்புமுறை.

சேசுநாதரின் வளர்ப்புத் தந்தையாராகிய சூசைநாதரின் வரலாற்று நூலே இக்காவியம். அவ்வரலாற்றை 36 படலங்களாகவும் 3615 கவிகளாகவும் முனிவர் கூறியுள்ளார். ஏனெனில், 36/131ல்,

"வான்மேல் மகுடம் புனைநாளில்
வரமா தவன்தன் கொடிபூத்த
தேன்மேல் தளம்பா றறுநூற்று
சேர்ந்த மூவைந்து திருமணிப்பூ
நூன்மேல் முறைநை யாத்தொடுத்த
நுண்மண் ணுரு றணியிதென
மீன்மேல் விளங்கும் வளன்பதத்தில்
விரும்பிச் சாத்தி மீண்டுரைத்தார்"

என்றார். எனவே வான்மேல் வளனாகிய சூசை முடிசூடிய போது அவனது கொடியிற் பூத்த மலர்கள் 3615க்கு மாலைகள் 36. அதற்கியையவே வானரசாளாகிய மரியென்பாள் சூசை தன் சரிதையை ஆகிர்த நகர்க் கன்னிக்கு உரையா நிற்ப, அடிகளும் அவ்வளவே கொண்டு 36 படலங்களாகவும், 3615 பாடல்களாகவும் அவ்வரலாற்றினை வரைந்தார் என்க.

இந்நூல் மூன்று காண்டங்களாக வகுக்கப்பெற்றுளது. வகுத்தது யாரென விளங்கவில்லை. எனவே காண்டங்களுக்குத் தனித்தனிப் பெயர்கள் இல்லை; ஆனால் ஒவ்வொரு படலத்திற்கும் பெயருண்டு. அவ்வப்படலத்தின் கண்ணுள்ள தலைசிறந்த பொருள் பற்றியே அவ்வப்படலங்களுக்குப் பெயர் அமைந்துளது. வரலாற்று முறையே, படலத்தின் வைப்பு முறையாகச் செல்லுமாற்றைச் சுருக்கிக் கூறுவம்.

இக்காவியம் மரபுவழுவா முறையில் நாட்டுப் படலம் நகரப் படலத்தோடு நடவா நிற்க, வளன் சனித்த படலத்தோடு காவிய நாயகனது வரலாறு உதயமாகின்றது. பின்னர் வளனது பாலமாட்சியும் திருமணமுஞ் செப்பி, ஈரறம் பொருத்தும் படலத்தை இசைக்கின்றார் நம் இன்கவி வள்ளல். தெய்வத் திருவருளால் கன்னிமரியம்மையார் கருவுறலும் வளனது மனத்தின்கண் ஐயந்தோன்றி நீங்குதலுமாகிய வரலாறுகளை இரு படலங்களாகத் தந்தார். ஐயமாகிய இருள் அகலவே இன்பமார்ந்த மகிழ்வினைப் படலமும், மகவருள் படலமும்,

பிறந்த மகவை மேய்ப்பர்களும் மூவரசர்களும் வந்து காணும் காட்சிப் படலமும் கவினுறத் தீட்டப்படுவன. எட்டாம் நாளில் மரிய சூசையர் இருவரும் தெய்வச் சிசுவைத் தேவாலயத்திற்குக் கொண்டுபோய் நேர்ச்சை முடிக்கின்ற செய்தியோடு முதற்காண்டம் முற்றுநின்றது.

இனி, தேவ குழந்தையாகிய சேசுவை எரோதன் என்னும் ஏந்தல் கொலை செய்வான் குறித்தமையால், சூசை, கடவுளது விருப்பத்திற்கு இயைய யூதேயா நாடு நீங்கி எசித்து நாடு நோக்கிச் செல்லுவதைப் பைதிரம் நீங்கு படலத்தின்கண் பகர்ந்தார். அவர்கள் எசித்தை நோக்கிப் போங்கால், தேவ குழந்தையாகிய சேசுவின் முன்னைய மாட்சியையும், தற்போதுற்ற தாழ்ச்சியையும், வழி நெடுக வந்த வானவர்கள் அவர்களுக்கு உணர்த்தும் பொருட்டுக் கூறிய பார்வோன் வரலாறு, நோவன் ஜலப்பிரளயம், சோதோம் எரியுண்டது முதலாகக் கூறிய பழைய ஏற்பாட்டுக் கதைகளையும் மூன்று படலங்களாகப் பாடினர். பைதிரம் நீங்கிய சேசு மரிய சூசையர் மூவரும் களரிமாபுரஞ் சேர, அங்கே நின்றதோர் ஓவியப் பாவையின் உண்மையை உரைக்கும் முகத்தால், கபிரியேல் என்னும் வானவன் கூறிய சேதையோன் வெற்றிப் படலம் செப்புவாராயினர். அதன்மேல் மூவரும் காசை நகர் நோக்கி யேக, அறஞ்சயன் என்னும் வானவன் அத்தலச் சிறப்பின் அறிகுறியாய் சஞ்சோன் கதையைச் சாற்றியமையும், அந்நகருள் தேவ குழந்தை இழைத்த இரண்டு அற்புதச் செயல்களும், காசை சேர் படலமாகக் கோவை செய்யப் பெற்றுள. பின்பு மூவரும் சீனயி மலை சேர்வுழி, ஆண்டு அடிகள் பத்துக் கற்பனைகளை இறைவன் அருளியவாற்றை அறைபாநிற்பர். இம்மலையை அடுத்துள்ளதும் முன்னொருகால் எலியமா முனிவர் வதிந்ததுமான பாலை வனத்துள் மூவரும் புகுந்த செய்தியைப் புகன்று, மேல் சித்திர கூடத்தின் காட்சிகளைக் கவிச் சித்திரங்களால் காட்டுகின்றார். பூங்காவின் கண்ணுள்ள மாடத்துச் சித்திரத்துள் மறைந்து கிடந்த ஜோசப்பின் சரிதையை முனிவர் செவ்விதிற் கூறிய பின், நீலாற்றின் தீரத்திலே மூவரோடு நம்மையும் நிறுத்தி, மோயீசன் வரலாற்றைப் பாமாலையாக முடைந்து செல்கின்றார்

ஈற்றில், முனிவர், மூவரும் எசித்து தேசம் சேர்வதையும், அத்தேசம் சூசையின் நல்லுபதேசத்தால் வேதத்தின் நல்லுபதேசங்களை ஏற்றுக்கொண்டமை பொருது, குணுங்குகள் கூடி மந்திர ஆலோசனை செய்து தம்முள் மல்லாடுவதையும், முடிவில் அச்சோகுகள் தோல்வியுறுவதையும் கூறினர். இத்துடன் இரண்டாம் காண்டம் முடிவு பெறுகிறது.

சேசு சுவாமியைக் கொல்லுமாறு எரோதன் நடாத்திய சிசு வதத்தோடு மூன்றுங் காண்டம் தொடங்கப் பெற்று அடுத்தாற் போல் கருணையன் வரலாறு காட்டப்பெற்றுளது. சூசை எசித்து தேசத்திலே இரவிமாபுரத்திலே இல்லறம் நடாத்திய திறத்தையும், அங்குள்ளார்க்குக் கிறிஸ்தவ ஈகைக்குச் சிறந்த இலக்காக விளங்கிய தொபியன் சரிதையை அவர் கூறி அநேகரைக் குணப்படுத்திய நலத்தையும், புனர் ஜென்மம் இன்மை, தலைவிதி இன்மை முதலிய உண்மைகளைப் புகட்டிச் சிவாசிவனைக் குணப்படுத்திய விதத்தையும், கேட்போர்க்கு ஞாபகப் படுத்தியபின், காமனுகிய வாமன் குணப்பட்ட வரலாற்றையும் வானவர், பசாசுகளின் இயல்புகளையும் அடுத்த படலத்தில் அறைந்து போந்தார். இவ்வாறு எசித்து தேசத்திலே மெய் வேதம் கெழுமிய செய்தி உட்பட 29 படலங்களை எழுதி முடித்து, சேசு மரி சூசையர் மூவரும் எவரும் அறியாவண்ணம் தாய் நாடு மீண்டதையும் வழியில் மோரியா மலையைக் கண்டதையும் அதனோடு கெழுமிய ஆபிரகாமின் அரிய பலியையும் மீட்சிப் படலமாக நம் காட்சிமுன் நிறுத்துகின்றனர். பிரிந்த மகவைக்காண் படலத்தின் வாயிலாக சேசு சுவாமியின் 12-ம் வயதின் செய்தியை வரைந்து, அதன்பின் சேசுவாகிய சிசு தீர்க்கத் தரிசனமாகக் கூறிய தமது சபையின் பிற்கால வளர்ச்சி, படர்ச்சி, வருங்கால உலக இரட்சிப்பு, வருங்கால உபத்திரவம் முதலான செய்திகளைப் புரோகிதப் படலத்திற் பொறித்துள்ளார். புரோகிதன் என்றால், 'வருங்காரியஞ் சொல்வோன்' என்று பொருள்படுவதைச் சதுரகராதியிற் காண்க. சூசை நாதரின் இறுதிக்கால நிகழ்ச்சிகளைப் பிணி தேற்று படலம், தூதுரைப் படலம் என இரு படலங்களில் பிணித்து எழுதிவிட்டு, அதன்மேல் பாடுபட்டு மரித்த சேசு

நாதரும் சூசைநாதரும் உத்தானமாகி உம்பருலக மகிமைக்குள் பிரவேசியா நிற்ப, தேவகுமாரன் விரும்பிய வண்ணம் சூசையப் பரை வானுலகிலும் லெயுப்போல்து என்னும் இராயன் விழைந்தவண்ணம் அவரை மண்ணுலகிலும் முடிசூட்டி வைக்கிறார் நம் கவியரசராகிய முனிவர். இங்ஙனம் உபயலோகத்திலும் விழாச் சிறப்புற்ற சூசைநாதர்மேல் எழுந்த காவியம் மங்களகரமான முடிசூட்டு படலத்தோடு மூன்று காண்டங்களும் முற்றுறவும், வானவரும் மானவரும் இறும்பூதுற்று இன்புறவும் முடியா நின்றது.

## ஆசிரியரின் சில சிறப்பியல்புகள்:

1. காதலன் காதலியைப் புணர்ந்துரைத்தலும், காதலி தன் காதலனை யணிந்துரைத்தலும் பருவக் கவர்ச்சியின் விளைவுகளாம். அத்தகைய நிலையினும் மேம்பட்டதோர் நிலையின் ஊன்றி, வாழ்க்கையின் பல்வேறு நிகழ்ச்சிகளை வரைதலின் கண் ஈடுபட்டுள்ள கவி ஒருவன் அவ்வந் நிகழ்ச்சிகளோடு இசையா நின்ற ஆண் பெண் இருபாலார்தம் அழகு, மனோ பாவம் முதலியவற்றை இன்றியமையாமை கருதி எழுதப் புகுங்கால், இரு பாலாரையும் ஒப்ப நோக்கும் உயரிய பார்வையுடையவனும் வாசிப்போருக்கு எட்டுணையும் அருவருப்புறுத்தானும் எழுத வேண்டுமென்றோ! இவ்வாறு எழுதாதார் துறவியாகிய திருத்தக்கதேவரை உள்ளிட்டார் பலர் உளர். ஆனால் அடிகளோ ஆண் பெண் இருபாலாரும் வெறுப்பறப் பயின்று விருப்புறத்தகு நிலையில் இக்காவியத்தை அமைத்துள்ளார். காமுகர் குணவிசேடம், காமத்தின் கேடுகள் முதலியனவற்றை விரித்துரைத்த காலத்தும் கொடுமொழி விலக்கி, நன்மொழி எடுத்தே கூறுவர். ஆகையால், எந்தப் பாவையேனும் தள்ளுபடி செய்யாமல், பாவையர்க்கும் பருவச்சிறார்களுக்கும் பள்ளிக்கூடங்களில் இந்நூலைப் படிப்பித்துக் கொடுக்கலாம்.

2. வீரமாமுனிவர் இயற்கையழகில் மிகவும் ஈடுபட்டவர். அவர் மாபெருந் துறவியாகலின், அடிக்கடி அடவிகட்குள்ளும் சோலைகட்குள்ளும் நம்மைக் கொண்டு போகிறார்.

மலைகளையும் ஆறுகளையும் அருவிகளையும் காண்புழி, புறவிடம்போக மலைத்தவராய் அங்கேயே நிலைகொண்டு அலையாக வரும் அரும்பாக்களை அள்ளிக்கொட்டுகிறார். அவர் பாலைவனத்துள் படரும்போதும் சித்திரக்கூடத்துள் செல்லும்போதும் யாம் கம்பராமாயணத்தை அவ்வவ்விடங்களில் கடந்து செல்லுமாறே தோன்றும். ஏனெனில்,

"காட்டிய விரலைத் தீக்க கண்டகண் விழியைத் தீக்கச்
சூட்டிய கொடிய கானம் சுடுமெனில் எனும்வாய் தீக்க,
வீட்டிய அழலை யெண்ணில் எண்ணிய மனத்தைத்
தீக்கக்
கோட்டிய மனத்திற் றீக்கும் கொடியதோர் சுரம தன்றோ!

என்றது தேம்பாவணி 19/7

"இருதுவே றின்மையால் எரிசுடர்க் கடவுளும்
கருதின்வேம உள்ளமும் காணில்வேம் நயனமும்"
"படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவேம் முடியமு டிருளும்வான் முகடும்வேம்"

என்பன கம்பராமாயணம், தாடகைப் படலம் ஆனால், சித்திரக் கூடப்படலம் என முனிவர் அப்படலத்திற்குப் பெயரிட்டமை கம்பராமாயணத்தின் கண்ணுள்ள பிரேமையாலன்றிப் படலத்திற்குரிய பொருளாலன்று என்பது போதரும். ஏனெனில் கம்பர் காட்டும் சித்திரம் நிலச் சித்திரம், முனிவர் காட்டும் சித்திரமோ படச் சித்திரம் என்று தெளிக.

சூரியோதயம் சந்திரோதயம் முதலிய இயற்கை நிகழ்ச்சிகளைக் கவிஞர் தாம் எடுத்துக்கொண்ட பொருளோடு பொருந்தக்கூறுவதில் இணையற்ற சதுரம் படைத்தவர். இங்ஙனங் கூறுவது தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரக் கூற்றாகும். சந்தர்ப்பத்தோடு சாலவும் பொருந்துமாறு, ஐயந்தோன்று படலத்தின் கண்ணும், ஐயங்கொண்டு ஐயம் நீக்கிய சூசையின் மனோபாவமும் கதையின் போக்கும் கற்போர்க்கு எளிதில்

விளங்கும் நிலையில் புலவர் அமைத்திருக்கும் தற்குறிப்பணிகள் மிக்க இன்பம் அளிப்பனவாகும். ஈதனைய பல்வேறிடங்களும் உண்டு.

வீரமாமுனிவர் இயற்கையைத் தம் குருவாகக் கொண்டு கற்றற்கரிய பல நீதிகளை அதன் வாயிலாகக் கற்றவர். எனவே அவர் காவிய நிலைக்கு அமைந்தவாறு இரவி எழுச்சி ஆதி இயற்கை நிகழ்ச்சிகளை வெறுமனே கூறிச் செல்வாரல்லர். அவர், மக்கள் யாவரும் இயற்கையாகிய குருவின்பால் பல்வேறு நீதிகளைக் கண்டுணர்தல் வேண்டும் என்னும் விழுமிய கருத்துடையர். எலிசபெத்து தன் மகனாகிய கருணையனைக் கானத்தில் விடுத்து மரிப்பதற்கு முன், அவள் அவனுக்குக் கூறிய கடைசிக்கூற்று இதற்குத் தக்கதோர் சான்றாகும். அக்கவியாவது:—

"வான்கலந்தவில் வனப்பொடு செஞ்சுடர் வயங்கத்
தேன்கலந்தபூ மலர்தலும் செழுஞ்சிறை புடைத்துக்
கான்கலந்தபுட் கணம் கனிபாடலும் கதிர்வான்
கோன்கலந்தசீர் வாழ்த்துனக் குணர்த்து
இருகுருவே"-26/71

என்பது, எலிசபெத்து தன் மகனை நோக்கி 'அப்பா, உனக்கு இங்கே தருக்கள் இல்லையென்று கவலற்க. சூரியன் உதித்த அளவிலே, தேன் கலந்த பூ மலர்தலும் புட்கணம் கனிந்து பாடலும் கடவுளை வாழ்த்துமாற்றை யுணர்த்தும் இரு குருக்கள்' என்றாள். எனவே வீரமாமுனிவர் இயற்கையின்மீது கொண்டுள்ள சீரிய நோக்கம் தெள்ளிதின் தெரியக் கிடக்கின்றதன்றோ!

3. தேம்பாவணிப் புலவர், தாம் திண்ணமெனக்கொண்ட கொள்கைகளை யாண்டும் வற்புறுத்தும் இயல்பினர். இதற்கடுத்த சான்றுகளைக் காவியம் எங்கும் பரக்கக் காணலாம். துறவின் மேன்மை, காமத்தின் கேடு, இயற்கையின் மாட்சி, பேரின்பத்தின் பாதை ஆகிய விஷயங்களைக் கூடியவிடமெல்லாம் கூறாதுவிடார். தவிர, அவர்தம் அகத்தில் பட்டதோர்

காரணத்தைக் காரியத்தோடு பிணைத்துக்காட்டி முன்பு தாம் காட்டிய காரணம் தவறு அற்றதென வற்புறுத்துவர். எடுத்துக்காட்டாக ஒன்று கூறுவோம். சூசைமரியர் திருமணத்தால் இசைவுற்றமைக்கு 5/30ல் நான்கு காரணங்களை முனிவர் காட்டினர். அவற்றுள் ஒன்று, தேவ குழந்தையாகிய சேசுவைப் பசாசுக்களுக்குத் தெரியாமல் மறைத்து வைப்பது. மேலே குணுங்கு மந்திரப் படலம் 78-வது செய்யுள் வாயிலாக அவர் ஈண்டுக்கூறிய கூற்றை நிரூபித்துக் காட்டுகின்றார். மரி யென்பவள் புருடனுள்ளவள், ஆதலின் கன்னி அல்லள் என்றும் அவள் ஈன்ற மைந்தன் ஜெகத்தை மீட்க வந்த நாதன் அல்லன் என்றும் பேய்கள் வரையறுத்து வாளாவிருந்தன. எனவே 'அன்று திருமண காரணங்களில் ஒன்றாகக் குறித்ததன் விளைவு இன்று கண்டது' என்று அடிகள் கூறிப்போந்த வகை மிகவும் குதூகலந்தரவல்லது.

4. இல்லறம் வேறு துறவறம் வேறு. இவ்விரண்டறங்களும் ஒருங்கே இயைந்து நடைபெறும் வழக்கம் மக்கள் உலகில் இல்லை. அகப்பொருள் இலக்கணம் இல்லறத்திற்கே உரியது. அகப் பொருளிலக்கணத்தின் துணைகொண்டு, இல்லற வாழ்க்கைச் சித்திரங்களை எளிதில் தீட்டி விடலாம். ஆனால் ஈரறங்களும் ஓரறமாகப் பொருந்திச் செல்லும் வாழ்க்கை யாண்டும் காண்டற்கரியது. அது அகப்பொருள் இலக்கணத்துள் அடைபடுவதன்று. இந்நிலையில் ஈரறங்களையும் ஓரறமாகப் பொருத்தி, ஆண்டுள்ள வாழ்க்கைச் சித்திரங்களையும் அடிகள் காட்டிய திறம் மிகவும் வியக்கற்பாலது. இத்தகைய வாழ்க்கைச் சித்திரங்களை அழகும் இன்பரசமும் ஒருங்கே ஒழுகக் கற்பனை செய்து காட்டத் துணிந்த கவி வலனும் தூய்மையோனுய்த் திகழ்ந்தாலன்றி அங்ஙனம் செய்தல் இயலாதாகும்.

துறவறத்திலே உறுதி வாய்ந்து நின்ற சூசையை மற்றோர் அறநெறியிலே முனிவர் எவ்வாறு பொருத்தினர்? அதற்கு அவர் செய்த வரன் முறை யாது? பாலனாகிய சூசை தவமேற்கொண்டு அடவியில் இருந்துழி, ஆண்டு ஆன்ற அறிவின்

சான்ழேன் ஒருவரைச் சந்திக்கின்றுன். அவர் பாலனை விளித்து, "இளைு, நாட்டை மறந்து காட்டில் வசிப்பது நன்றன்று" என்க, பாலன் "வேட்கை அற வெங்கானமே நன்று" என்று துறவறத்தின் பண்புகளை இயம்பினன். "தீதிலா இடம் வேண்டிற் சேனுலகே புகுதல் வேண்டும்", என்ற அச்சான்ருேனைச் சூசை அன்புடன் பார்த்து, "ஐயனே, துறவறமே சிறந்தது என்று கேள்வியுற்றேன். வேறறம் உண்டேல் விளம்புக" என்றலும்,

"ஈரறம் பிரிந்து நோக்கில்
இயம்பிய துறவின் மாட்சி
பேரற மாவதன்றிப்
பிரிவிலா விரண்டுந் தம்முள்
ஓரற மாகச் சேர்க்கின்
உறுதியும் பயனும் ஓங்கத்
தேரற மாகும் என்ருன்
செழுந்துறைக் கேள்வி மூத்தோன்" 4/40

"துறவறப் புண்ணியங்கள் சிறந்தவை. ஆனல் அப் புண்ணியங்களைப் பிறர் பயன்பெறக் காட்டல் வானுலகிற்குரிய மாட்சிமையும் வலிமையுமாகும்", என்ருர் சான்ருேர்.

இவ்வாறு பாலனுகிய சூசைக்குக் கேள்வி ஞானம் ஊட்டியமையால், ஈரறங்களையும் ஒன்ருகப் பொருத்தும் வாழ்க்கையே அதிக உறுதியும் பயனும் தரும் வாழ்க்கை என்னும் கொள்கை அவனது மனத்தின் ஓர்புடை கிடந்தது. அதுவே ஈரறம் மேற்கொள்ளுமாறு அவனைப் பிற்காலத்தில் தூண்டிற்று. இதற்கு அநுகூலமானதோர் சம்பவத்தை ஏற்கனவே அறிந்து காவியத்திடை புகுத்திய திறம் பெரிதும் பாராட்டப்படத் தக்கது.

ஈரறம் பொருந்த ஓரறம் மேற்கொண்ட மரிய சூசையர் இருவரும் ஐங்கதவு அடைத்து, அவாவினை யகற்றி, அறம்

வளர்த்து, அகன்ற அன்பிலும் அகலாத இன்பிலும் இயைந் தனர். இவ்வறம் எத்தகையது? இதன் குறிக்கோள்கள் யாவை? இனையவற்றை அடிகள் அவ்விருவர் உரையாடல் மூலமாய் 6/45-56 வரை எழுதியிருப்பது பயிலுந்தோறும் இன் பம் பயவாநிற்கும். சூசையை "ஈரறக் கண்ணடியினன்" 6/55 என்றும், "அணிச்சாயல் ஈரறம் சேர்த்தணிந்த அருந்தவத் தோன்" 20/20 என்றும் பாராட்டிப் புனைமாலை சூட்டுகின்றார். "கதிப்பால் காட்டும் கஞ்சனத்தாள்" 6/56 என்று மரியம்மை யைப் பரவி மகிழ்கின்றார். தூய காதலினர் இருவரும் ஒரு வரை யொருவர் விட்டுப் பிரிய மனமிலராய், "கடவுளின் தயையையருளும் துறவு பூண்ட நீயே இன்பக் கடல்" என்று அவன் கூறவும், "தீய ஆசையெல்லாந் தீரும் ஆசை நீயே, என் உயிர் இனிதின் தோயுங் கடல் நீயே," என்று அவள் கூற வும், இவ்வாருக உரையாடி ஓருயிரைப்போல் ஓகையுடன் உறைந்தனர். இஃது எவ்வாறு புலனுகின்றது எனின்,

"என்னுயி ரதனின்ஊங் (கு)இனிய பொற்றெடி
தன்னுயிர் பிரிந்தியான் தனித்துப் போயின
பின்னுயிர் எனதுடல் பிரிவி லாங்கொலோ
உன்னுயிர் உய்யலும் எளிய தோவென்ருன்" 7/88

என்னும் சூசையப்பர் வாக்காற் புலனும் என்க.

மரிய சூசையர் இருவரும் அச்சிறந்த அரிய அறநெறிக்கண் பெரிதும் வெற்றியுற்ற பெற்றியராய் வாழ்ந்தமையின், இன்ன வர்க்கு இடையிட்ட இன்னல்களும் இன்பம் விளைத்தனவென் ருல், இவர் தம் வாழ்க்கையின் பெருமையையும் மகிமையையும் வார்த்தைகளினல் வரைந்து காட்டவல்லார் யாரே? சூசை பிணிவாய்ப்பட்டுக்கிடக்கின்ருர். அல்லும் பகலும் அவர் தம் அண்டையில் அமர்ந்து, நல்லுரை கூறித் தொண்டு செய்கின் ருர் மெல்லியலாளாகிய மரியம்மையார். ஆஹா! அதனைச் சூசையப்பர் எவ்வாறு துய்க்கின்ருர்!

"இனிய தேனினு மினிய யாவிலும் இனிய தீஞ்சொல்லைக்
கனிய ஆடுவள் உயிரைக் காத்த மெய்யெனஇரு பொழுதே
நனிஅ வாவொடு பிரியா நயந்துசெய் யேவலா லுடலை
முனிய வந்தநோய் முத்திமுற் றுகும் வாழ்வினு
மினிதே" 33/24

*மரியாள் புரிந்த அரும் பணிவிடைகளால் உடலை வாட்ட வந்த நோய் சூசைக்கு முத்தியுலக இன்பத்தினும் பேரின்பத்தை அளித்ததென்றால், இதுவன்றோ இன்பத்தின் உச்சநிலை! மனோகற்பனைகளையும் தாண்டிய இவ்வுச்சநிலையை ஆசிலாப் புகழ் வீசிய முனிவர் உய்த்துணர வைத்த நிலை வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்ததன்றோ!*

*5. வீரமாமுனிவர் நந்தமிழ் மொழியின்மீதும் தம் தாய் நாட்டின்மீதும் அளவிலா ஆர்வமுற்றவர். "எனையீன்ற இணையா இத்தாலிய நாடு" "ஈரறமும் முச்சீரும் சுகமோர் ஏழும் நிமிர் இத்தாலிய நாடு" என்றெல்லாம் கூறும்பொழுது, அவரது நெஞ்சில் ஊறிக்கிடக்கும் தாய்நாட்டன்பு எத்துணை வன்மை வாய்ந்தது என்பதை யாம் எளிதில் தெளியலாம். தவிர, தமிழ்ப் பற்றுடையார் என்றமைக்கு அவரது தேம்பாவணியாம் காவியமே தேம்பாத சான்றாகும். ஆதலின் அவரது உள்ளத்தின்கண் உறைந்து கிடந்த தமிழ் மொழிப்பற்றினை,*

"தண்டமிழ்ச் சொல்லும் நூலும்
சால்பொடு கடந்த வண்ணத்
துண்டமிழ் துவப்பின் உள்ளத்
தோங்குமிவ் விருவர் தம்முள்
பண்தமிழ் உரைத்த தேபோல்
ப்யன்பகர்ந் திளவற் காண
மண்டமிழ் துகும வாவின்
மகிழ்வினை யுரைப்ப ராரோ" 9/133

*என்னும் கவியால் கண்டுகொள்க. சூசைமரியர் தமிழ்ச் சொல்லாலும் நூலாலும் கூறவொண்ணு நிலையில் மகிழ்வுற்றார்*

என்றார். தமிழ்ச் சொல்லாலுங்கூற முடியாதெனில் வேறு எம்மொழியானும் கூற முடியாதெனப் பொருள்பட வைத்தார். மேலும், பண்(வீணை) தமிழ்ப் பாட்டைப் பாடினாற்போல என்றார். வீணையின் நாதம் இனிது. அந்நாதம் தமிழ் வரிவடிவோடு வெளிவருமாயின் அப்பொழுது உண்டாகும் இனிமையையே உவமை கூறினர். வீணையின் நாதம் ஏனைய மொழிகளின் வரிவடிவில் வெளிப்பட்டாலும், அஃது உவமையாகாது எனப் பெறவைத்தமைக்கு அவரது தமிழ் மொழிப்பற்றொன்றே காரணமாகும்.

ஒரு நூல் காவிய மாவதற்குத் தேவையான சட்ட திட்டங்கள் எல்லாவற்றையும், முனிகவி தந்நூலில் அநுசரித்துள்ளார். செய்யுள் பத்துப் பொருத்தங்களைப் பொருட்படுத்தல் அபத்தமென தமது இலக்கண நூற்களில் கூறினும், தமிழ் மரபை ஒட்டி அவற்றைத் தேம்பாவணியில் பொருத்தினாரெனில், இது தமிழ் மொழிப் பற்றன்றி வேறென்ன?

## முனிவர் எடுத்தாண்ட பிறநூல் மேற்கோள்கள்

கால்டுவல் கண்காணியார் கருதியதுபோல, முற்றிலும் வேறான தாய்ப்பாடை ஒன்றைக்கொண்ட மேனாட்டினர் ஒருவர் இன்றமிழ் பயின்று, இத்தகைய காவியம் ஒன்றைக் கவினுற ஆக்குவதென்றால், அது இறும்பூதினும் இறும்பூதே, ஆயினும் நங்கவியறிஞர், இயலாததை இயற்றிவிட்டார். அவர் தமிழ் நூல் பரப்பையெல்லாம் துருவித் துருவி ஆய்ந்து அலசிப் பயின்றவராய் இருத்தல் வேண்டும்; ஆதலின் தாம் இயற்றிய காவியத்தில், நாப்பழக்கம் செவிப் பழக்கத்தாலே தம்மையறியாமலே நானாவித நூற்களில் காணும் சொற்றொடர்களைப் புகுத்திவிட்டது அறியத்தக்கது. எனவே, தேம்பாவணியை ஒருமுறை மேலோட்டமாக வாசித்தாலுமே பல அரிய நூல் கருத்துகளும் சொற்களும் துள்ளிக்குதித்து விழுந்தாற்போல் திடீர் பொதீரெனக் கண்ணில் படுகின்றன. அவை பொற்றகட்டின்பாலே வயிர மணிகளைக்குயிற்றினால் அன்ன மிளிர்வன. இச் செயல் ஆசிரியரது முதிர்ந்த தமிழ்ப் புலமைக்கு எடுத்துக்

காட்டாக அமைவதுமன்றி, ஆராய்வோர் அகத்தே ஆனந்தத்தைக் கொட்டுகிறது. இது தொன்னூற் புலவர்பால் ஆசிரியர் கொண்டுள்ள மதிப்பையும் சுட்டுவதன்றோ!

"அன்பு வாய்ந்த உயிர்நிலை யஃதிலார்க்
கென்பு தோல் உடல் போர்த்த"–4/[65]

இதனைப் படிக்குங்கால்,

"அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு"

என்ற திருக்குறள் நினைவிற் படுகின்றது,

"அன்புகுக்குங் கண்ணீரே அன்பிற்
காற்றுப் பெருந்தளை யென்" 30/[17]

என்பதைப் படிக்குங்கால்,

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்"

என்ற திருக்குறள் நினைவுக்கு எட்டுகின்றது.

"பெய்யு மாரியால் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்"

எனபது கம்பர் வாக்கு.

என்றுபெய் மாரியால் எழுந்த வெள்ளமாய்ச்
சென்றுமொய் வேலைமேல் திரண்ட ஆறுபோல் 5/[58]

என்பது வீரமாமுனிவர் வாக்கு.

"எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தா
லெனச்செவியில் நுழைத லோடும்"
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
ஆருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான்
கடுந்துயரங் கால வேலான்"

இது கம்பர் வாக்கு. தசரதன் விசுவாமித்திரரால் அடைந்த துயரத்தைக் கவி காட்டுகிறார்.

"கண்ணலாள் உரைத்தசொற் காதி னுட்புகப்
புண்ணலாம் பெரும்புழை புகுந்த தீயென
எண்ணலால் அருந்துயர் எய்திச் சூசையுள்
நண்ணலாந் தழல்பொருப் பிரித னுடினன்" 7/84

இது வீரமாமுனிவர் கூற்று. ஐயந்தோன்றலால் சூசையுற்ற துயரத்தைக் கவி பாடுகின்றார்.

நாக நெற்றி நன்மணி சிந்து மருவிபோல்
நாக நெற்றி நன்மணி யோடை நறவிம்மு
நாக நெற்றி நன்மலர் சிந்தி நளிர்செம்பொன்
நாக நெற்றி மங்கையர் ஒத்தார் மடநல்லார்.

நாக நெற்றியின் நன்மணி யோடைபோல்
நாக நெற்றியின் நன்மணி யாறுபாய்
நாக நெற்றியின் நன்மலர் காவப்பா
நாக நெற்றியின் நன்மதி தோன்றிற்றே 13/28

இவற்றுள் முந்தியது சிந்தாமணிச் செய்யுள்; பிந்தியது தேம்பாவணி. முந்தியது மதிமுக மங்கையர் வருணனை. பிந்தியது மதி மண்டிலத்தின் வருணனை இவ்விரண்டினும் சொல் விழுக்காடும் கருத்தும் ஒன்றித்துச் செல்லும் நிலை மிகவும் உவகை ஊட்டத்தக்கது.

"சொல்...கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே

நெற்பயிர் கருத்தாங்கி, மேல் அல்லாதார் செல்வம்போல தலை நிமிர்ந்து நின்று, கல்வி தேர்ந்த மாந்தரைப்போல விளைந்து வளைந்தன என்றார் சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்க தேவர்.

"பூரி யார்திருப் போல்தலை பசியகூழ் நிறுவி
நீரி ஞர்தலை நேரநேர் வளைவொடு பழுத்த" 1/14

"நெற்பயிர்கள் கீழ்மக்கள் செல்வமுற்றபோது நின்றாங்கு தலை நிமிர நின்று, சால்புடைய பெரியோரன்ன பணிவொடு பழுத்தன" என்றார் வீறுடை நாவின் விழுமிய முனிவர். ஈண்டு கருத்து ஒன்றித்து நிற்பினும் சொல்லுக்குச் சொல் வேறுபட்டு வந்தமை காண்க.

இங்ஙனம் ஆராயுங்கால் உருவிலும் பொருளிலும் ஒற்றுமையுடைய பல செய்யுட்களைப் பார்க்கலாம். திருவிளையாடற் புராணம், பெரிய புராணம்,காஞ்சிப் புராணம் முதலியவற்றின் நாட்டு நகரப் படலங்களோடு தேம்பாவணியின் முதலிரண்டு படலங்களையும் ஒப்பிட்டுணர்வுழி, ஒப்புமைப் பகுதிகள் பலவற்றைக் கண்டு பிடிக்கலாம். பின் வரும் செய்யுட்களை ஒப்புமை காட்டும்பொருட்டு எண்ணல் தீட்டினம்.

1. *திருக்குறளின் கருத்துறு பாக்கள்:—*
*பாயிரம் 8; 4/65; 6/65; 7/9; 9/27. 36; 10/50; 10/73.79; 29/101. 106; 30/17; 32/49.*
2. *கம்பர் வாக்கும் கருத்தும் உள்ள கவிகள்:—*
*பாயிரம் 1, 4.; 2/2; 2/39; 2/64; 3/29; 5/53; 5/145; 7/84; 10/19; 11/98, 34/40, 36/45; 19/7; 27/38; 27/67;*
3. *சீவகசிந்தாமணியது:— 1/14, 1/33; 10/27; 13/20.*

4. புறநானூறு:—2/62
5. நாலடியார்:—28/57
6. கலித்தொகை—பாலைக்கலி:—30/15
7. அரிச்சந்திர புராணம்:—14/14
8. யாப்பருங்கலக் காரிகை:—6/63.

மேலோட்டமாகப் பார்த்த அளவிலேயே இத்தனை மேற்கோள்களைக் காட்ட இயன்றது. இம்மேற்கோள்கள் அடிகளது பிறநூற் பயிற்சித் திறத்தையும் அதனை எளிதிற் கையாளும் எளிமையையும் உள்ளங்கை நெல்லிக்கனி போலுணர்த்துவன.

**10. சொல்வழக்கும் சொல்லாட்சியும்.**—அகராதியை ஆக்கிய பெரியார் இயற்றிய இக்காவியத்திற் காணலாகும் அரிய சொற்களும் சொற்றொடர்களும் பல. அவை அரியன ஆமாறு எங்ஙனம் எனின், அவற்றுட் பல இந் நூலுக்கே உரியனவாம்.

சுவாமிகள் தாம் எழுதிய செய்யுட்களெல்லாம் அவர் காலத்திலேயே மாணவர் ஒருவர் அருளிப்போந்த 'பொழிப்புரையும், தேம்பாவணியாகிய காவியத்தோடு யாம் பெற்ற பிறிதோர்பேறும். திடீர் திடீரென்று மடக்குச் செய்யுட்களால் ஈரருத்தம்படப் பாடும் அவர் கருத்துக்கொத்த பொழிப்புரை இன்றேல், கற்றோரும் பொருள் காண்டல் கடினம். யாமறிந்த புலவரிலொருவர் அகராதிகளில் காணப் படாத சில சொற்களும் தேம்பாவணியில் உண்டு என்றார்; அஃது உண்மையேயாம்.

1. 'அளம்' என்ற தனித் தமிழ்ச் சொல்லுக்கு, 'உப்பளம், கூர்மை, நெருக்கம்' என்பன பொருளாகும். பாயிரத்தில் 'அளம்செய்யும் தமிழ்ச்சொல்' என்றவிடத்து அதனை 'நிறை' எனும் பொருள்படக் கூறினர், நெருக்கம்

உண்டாதல் நிறைவின் பொருட்டாகலின். இவ்வாறு சொற்க ளின் பொருளை விரிவாகக்காட்டுந் திறத்தைக் காவியமுழுதுங் காணலாம்.

2. "வாய்வழி பரவிய நஞ்சின் வண்ணமே
காய்வழி ஆதன்முன் கனிந்த ருந்திய
தீய்வழி கருவழி சேருந் தொற்செயிர்
ஓய்வழி பொருதுஇறை யொழிய முன்னினான் 349

வாய் வழியாப் பரவிய நஞ்சு, வாய்மூலமாக உடலெங்கும் பரவிய நஞ்சு என்றார். "ஆதன் கனிந்தருந்திய காய்வழி- ஆதன் கனிந்தருந்திய கனியின் வழியாக; தீயவழி கருவழி சேரும்— தீமையின் காரணமாக சென்மத்தின் வழியே சேரும்" என்றார். இதை இறையும் "பொருது—பொறுமையி னின்றொழிய, செயிர் ஓய்வழி முன்னினான்-செயிர் ஓயும் வகை முன்னினான்" என்றார். ஈண்டு 'வழி' எனுஞ் சொல் விளைத்த பல்வேறு பொருட்களைக் காண்க. ஈண்டு எக்கா லும் பறிக்கப்படாத கனியைக் 'காய்' என்றவாறு மிகவும் இன்பூட்டுவதொன்று. ஆதன் தீமை வழிந்து கருவழி சேரும் என்பதும் பெற்றும். தொல்வினை எனின் அச்சொற் றொடர் இந்துமதக் கொள்கைக்கிணங்க, முன்னைய பிறப்பின் வினையைக் குறிக்குமாதலின், அதனை விலக்கித் 'தொற்செயிர் (சென்மப்பாவம்) என்றார். தொற்செயிர் முறைபொருது, அம் முறை ஒழியவும், சன்மப் பாவம் ஒழியவும் ஆனதோர் முறை உன்னினன் என்றார். தவிர, ஈண்டு விரவியுள்ள உவமை மிகுதியும் நயமுடைத்து. அதனையும் விளக்குவது ஈண்டு எம் நோக்கமன்று,

3. புற்பதிக் குழாத்தின் நிரைத்தன பிச்சம் 36| 112 என்றார். புற்பதிக்குழாம் என்பது பனைமரச் சோலை எனப் பொருள் கொண்டார். எங்ஙனமெனில்,

"புறக்காழனவே புல்லென மொழிப
அகக்காழனவே மரமென மொழிப"

என்னுந் தொல்காப்பிய மரபியல் விதிப்படி, புறத்தே மட்டும் வைரங் கொண்ட பனையும் புல்லினத்தைச் சேர்ந்ததே. ஆயினும் புல்லுக்கெல்லாம் தலையாய புல், பனைமரம் என்றமை கொண்டு, அதனைப் புற்பதி என்றார். என்னே இவர் தம் சொல்லாக்குந் திறம்!

4. நாவகன் என்பான் சூசையால் எசித்து தேசத்தில் பாவ வழிவிட்டு நன்னெறிக்கண் திரும்பியவன். அவன் "யான் சகல பாவங்களையும் பயிற்றுவிக்கும் கல்லூரி போன்றிங்கிருந்தேன்" என்றான். கல்லூரி எனும் சொல் அக்காலத்திலேயே ஆசிரியர் ஆக்கியருளிய சொல் என்பது அறியக் கிடக்கின்றது. கல்வி ஊர்ந்து செல்லுமிடம் என்பது இதன் திரண்டபொருளாம்.

5, "சிவமலி தனிமுதலே" என்புழி, சிவம் என்ற சொல் நன்மை, நற்கதி என்ற பொருளில் வந்தது,

6. அடிகள் இடப்பொருள் உருபுகள் பலவற்றை "இடம்" எனவே பொருள்படுமாறு வழங்குவர். எடுத்துக் காட்டாக, 'எலா உளி அழ' 13/35,–"எல்லா இடமும் இடத்தில் உள்ளவர்களும் அழ" என்றார். 'கண்ணடி' என்ற சொற்றொடர்க்கு, "கண்ணடி, கள்நாடி, கண்நாடி, கண் (இடத்தை) நாடி" என நான்கு பொருட்கள் கொள்வர்.

7. நன்னூலாசிரியர் 'செல்வுழி' என ஒற்றையடுத்தும் வகரவுடம்படுமெய் தோன்றும்" வகைக்குச் சிறப்புவிதி கொண்டமைக்கிணங்க, வீரமாமுனிவர் 'செல்வப்பால் 15, 187 (செல் + அப்பால்) என்றார்.

8. "கடலைக் கடைய அமிர்தமொடு கடுவும் பிறந்ததெனப், படலைக் கதையாய் அறிந்ததலால் பயனைக் கண்டதில்லை" 28/29 ஈண்டுப் பாற்கடல் கடைந்த கதையைப் படலைக் கதை என்றார். புனைகதை என்பது பொருளாம்.

9. 'இலா' எனும் பதத்தைப் பெரும்பாலும் 'இல' என்றே கூறுவர். இடும் அல்லது உண்டாகும் எனும் பொருளில் உகும் எனும் மொழியை வழங்குவர். இயாப்பு என்று இகரவுயிரோடு சேர்த்தே வழங்குவர். இடையரை முல்லையார் என்றும், சூரியனை ஒற்றையாழித்தேரோன் என்றும் தமிழ் மரபு தவறாமே வழங்குவர். இவ்வாறு தேம்பாவணிக்கே உரித்தான சொற்கள் இன்னும் பல உள.

11. சந்த அமைப்பு வகை. செய்யுளுக்கு இன்னோசை ஊட்டுவது சந்தமேயாகும். தேம்பாவணி ஆசிரியருக்கு முன்னுள்ள வில்லிப்புத்தூர் ஆழ்வாரையே சிறந்த சந்தக்கவி என்பர் புலவர் பெருமக்கள். வீரமாமுனிவரோ அவரின் மேம்பட்டதோர் நிலையில் உள்ளார் என்பதும் பலர்க்கு உடன்பாடு.

முனிவர், கம்பர் பெருங் காவியத்தில் காணும் 87 சந்தங்களுக்கும் மிகைபடத் தம் சிறு காவியத்தில் காட்டியுள்ளார் ஒரொரு படலத்தின் கண்ணும் நான்கைந்து வகைச் சந்தங்கள் உள்ள பாக்கள் உண்டு. பொருட் பிரிவுக் சியைந்தவாறு பத்தி பத்தியாகக் கட்டுரை ஆக்குவது நிகர, சின்னஞ் சிறு பொருட் பிரிவுக்கும் ஏற்றவாறு வெவ்வேறு சந்த அமைப்புகளோடு கூடிய பாக்களைச் சந்தமுற அமைத்துச் செல்வதை நோக்குழி, அத்துறையில் அவர் எத்துணை கைவன்மையும் அநாயாச ஆட்சித் திறனும வாய்ந்தவர் என்பது மலையிலக்காகத் தோன்றற்பாலது. பொருளின் நவரசச்சுவைக் கேற்றவாறே சந்தம் எடுத்துப் பாடுவதில் இவர் முற்காலப் புலவர்களுக்குச் சற்றேனும் இளைத்தவர் அல்லர். சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு சந்தங்களை அடிக்கடி இவர் மாற்றிப் பாடுவதால், ஒருவகைச் சந்தம் யாண்டேனும் முப்பது பாக்களுக்கு அப்புறம் செல்லாது.

சோதோம் நகர் இறைவன் ஏவிய எரிக்கு இரையாவதை இயம்பும் இடம் 14/129, அரிச்சந்திர புராணத்தில் உள்ளதும் மிகவும் கீர்த்திவாய்ந்ததுமான மயானகாண்டம் போலவே

சந்தம் அமைந்து அந்தமுறுகின்றது. இதன் முடிவில் வரும் மூன்றுகவிகள் அமலனின் ஆண்மையை வியந்து கூறுவன. இவை கம்பராமாயணத்தில் நாகபாசப் படலத்தின் கண்ணுள்ள கருடன் துதியைச் சந்தத்தானும் மகுடத்தானும் ஒத்திருக்கின்றன. காட்சிப் படலத்து முதற் பகுதி சுந்தர காண்டத்து உருக்காட்டு படலத்துச் சந்தத்தைத் தழுவிச் செல்லாநின்றமை காண்க.

" ஒண்டலங்க ளண்டவும்ப ருந்தொழிம்ப ராபரா
விண்டலங்க லந்திலங்கு வெண்களங்க னுப்பெனு
மண்டலங்க ளெங்குமியாரும் வாழளீர வெண்குடை
கொண்டலங்கல் கொண்டதேறல்
கொண்டவன்பு கொற்றவா "
என்பது தேம்பாவணிச் செய்யுள் 11/6

" விண்டலங கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கல்தங்கு பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலொன் றிரண்டுகண்ணின்
மொண்டுகொண் டென்னுவியை
உண்டதுண்டென் னெஞ்சினின்று முண்டதென்றும்
உண்டரோ "

என்பது கம்பர் காவிய கார்முகப் படலத்தது.

காவியத்துள் பயின்று வரும் பலவகைச் சந்தங்களையும் அவற்றின் ஓசை நயங்களையும் காட்டுவான் சில எடுத்துக் காட்டுகள் காட்டுவம்.

*1.* ஒரு திறச் சொல்லும் எழுத்தும் வருவது.

" வீறு வீரனியை தாழி நூறியிடு
வேலை வேகமுட னூறெடு

நூறு நூறுகலம் நூறி நூறுமொடு
நூறு நூறுசுடர் தோன்றநூ
றேறு நூறுமொடு நூறு தாரையொலி
ஈறி லாதுமெழ வானின்மேல்
சீறும் ஏறுபல கோடி கோடியதிர்
சீறின் நாலுதிசை கூசவே 16/32

ஈண்டு நூறு என்ற மொழியைப் பல பொருள் படச் சமர்த்தித்து வைத்தமையோடு அதனைப் பன்முறை வரப் பண்ணி, நெட்டெழுத்துச் சந்தமும் அமையச் செய்தார்.

2. எதுகைச் சந்தம்.

“செல்வேஞ் செல்வ நகர்தகர்ப்பச்
செல்லச் செல்லும் எல்லைசெலும்
வெல்வேம் வெல்லும் வல்லமையோ
வீர வில்விள் மாரியினோ(டு)
எல்வேல் வல்ல தல்லதென
இறைவன் தான்தன் வலிகாட்டக்
கொல்வேல் இல்லா திங்ஙகரைக்
குலையச் சிதைத்தல் காண்மினென்றான்” 15/15

இஃது எரிகோ நகரின்மீது படையெடுத்துச் செல்லுங் கால் சோசுவன் தன் வீரரை நோக்கி விளம்பிய வீரவுரை. “செல்வேம், அச் செல்வ நகர் தகர்க்க எத்துணை நேரம் செல்லுமென்றால், செல்லச் செல்லும் எல்லை (அளவாகிய நேரமே) செல்லும்” என்று முனிபுங்கவர் கூறுமாற்றான் இன்பம் பொங்குவதன்றோ?

3. வல்லெழுத்துக்கள் பயின்று வருவது.

“இடத்திடத்த டத்தியுற்ற இக்குடைத்த இன்புசொல்
குடத்தியர்க்க மைத்தபற்றல் கூர்ந்துதோன்றல்
தாள்மிசை
தடத்துணர்க்க மைத்ததேறல் தாங்குமாலை சாத்தலும்
முடித்ததிங்க ளைத்தொடுத்து உடுக்கள்துற்றல்
ஒத்ததே” 11/9,

இப்பாவின்கண் அமைந்துள்ள வல்லெழுத்தோசையும் டக், டக் என்று செல்லும் நடையழகும், எதுகை மோனைகளின் கூட்டமும் சந்தக் குழிப்பும் பயிலுங்காலை, தொடக்கத்தில் கஷ்டமாயினும் சொற்பொருளுணர்வுளி, இறுதியில் இன்பம் பயப்பது ஒருதலை.

4. மோனைமிக்கு வரும் சந்தப்பாக்கள்.

“ஏகவானை யேகவெங்கும் ஏகனாகி யாள்பவன்
மாகமேவு மாடநீக்கி மாடுமேவு ழைக்குறைந்(து)
ஆகமாடை வேந்தர்நீக்கி ஆயரைத்தெரிந்ததென்(று)
ஓகையாக ஓகனேடும் ஓங்குதாயும் வாழ்த்தினுள்” 11/14

ஈசன், குழந்தையாக அவதரித்து வேந்தர்களது மாளிகைகளை நாடாமல் மாட்டுத் தொழுவத்திலே பிறந்து, திருமேனி தரிசனத்தை தனவந்தர்க்களியாது எளிய ஆயர்களுக்கு அளித்த அதிசயம் நோக்கி, அன்னைமரியும், ஆடவர் திலகன் சூசையும் மகிழ்ந்த செய்தி ஈண்டு வரையப் பெற்றுள்ளது.

“விழுந்துறுங்க ளிப்புவிஞ்சி வேதநாதன் மேற்பதம்
தொழுந்தொறுந் தொழுந்தொறும் துளங்குகின்ற
தோற்றமே” 11/2

ஈண்டு அதே சந்தத்தில் ஈற்றடி முற்றுமோனையுடன் வந்தமை நோக்கற் பாலது.

5. வேறு சில எடுத்துக்காட்டுகள்.

‘காலையி லாகையி லாகிய காட்சியி லாயக
ளிப்போடு’, 15/[106]

‘மருள்தரு நெஞ்சிடை யஞ்சின வெஞ்சில வஞ்சின
வெஞ்சமருக்கு’ 15/[107]

“கடியொலி யெழவிழு கலினுறை படுமொலி
இடியொலி யிடியினு மிறுமிர தமதொலி
மடிகரி யெழுமொலி மடிபரி யெழுமொலி
முடிவில் விளிகுவர் முதிரொலி நிகரில” 15/[172]

மெய்யெழுத்தின்றி, குறில்கொண்டே பாவை முடைந்து முடித்தார்.

“மஞ்செஞ் சுகமா முரசார்ப் பவரா
நஞ்செஞ் சுகவெய்ப் படைஞாஞ் சிலொடு
நெஞ்செஞ் சுகநீ ணிலமெஞ் சுகவஞ்
தஞ்சஞ் சிலமன் னரடுத் தனரால்” 15/[27]

‘உகும்’ ‘உண்டாதல்’ என்றும் ‘இலா’ ‘இல’ என்றே வருமென்றும் முற்கூறியமை ஈண்டு வலியுறுவது. மஞ்சு 1. எஞ்சுக - மேக முழக்கத்தினு மிக்குண்டாம்படி. 2. நஞ்சு எஞ்சுக – நஞ்சினுங் கொடிதான. 3. நாஞ்சில் ஞாஞ்சில் எனப் போலியாக வந்தது. 4. நெஞ்சு-பயம் (ஆகுபெயர்) நெஞ்சு எஞ்சுக - பயமிகும்படி. 5. நீள்நிலம் எஞ்சுக–நிலம் போதா அளவில் மிகப் பரந்த நிலையில். 6. அஞ்சு அஞ்சு இல மன்னர் — ஐந்து அஞ்சுதல் இலாமன்னர்; முன்னையது போலி, பின்னையது (அஞ்சு)முதனிலைத் தொழிற்பெயர்.

இது சோசுவன் மீது படையெடுததுப் போந்த ஐந்து மன்னர் தம் செய்தி; மிகச் சிறியதோர் செய்திக்குப் பொருள் விளங்கா நிலையில் பொருந்தியதும், வாசிப்போரின் புலமைக்கு விருந்து ஆயதுமாகிய அரிய செய்யுள் ஒன்று, பாவுக்குரிய எல்லா நலங்களும் கொண்டு எழுந்தது காண்க.

6. வெகுளிச் சுவை.

கோலியாற்றென்னும் அரக்கன் தன்ெனடு தனிப்போரு டற்ற வந்த பாலனாகிய தாவீதனைப் பார்த்துப் பழித்து, எழுந்தெதிர் நின்று வெகுண்டு,

"நீய டாவெதிர் நிற்பதோ மதமபொழி கரிமேல்
நாய டாவினை நடத்துமோ கதங்கொடு நானே
வாய டாபிளந் துயிர்ப்பிட மறுகிநீ நுண்தூள்
ஆய டாவுல கப்புறத் தேகுவாய் என்றான்" 3/27

வெகுளியும் அதனாலாம் வெறியும் தோன்றக் கூறும் அரக்கன் கூற்றின்கண் கெம்பீரமும் பெருமிதமும் தொனிக் கின்ற பாவம் போற்றற்குரித்தே,

**12. ஒலிக் குறிப்புச் சித்திரங்கள்:-** ஒலிக் குறிப்புகளை வரைந்து காட்டுவது மிக எளிது என்பர், "சள சளவெனத் தாரைகள் வீழ்ந்தன; களகளவெனக் கரைகடந் தோடின"என்றவாறு கவிகளில் அமைப்பது அரிதன்று. எல்லா ஒலிகளுக்கும் அழுத்தம் என்பதொன்றுண்டு. அது எடுத்தல், படுத்தல், நலிதல் என்னும் மூவகையானும், இசையில் படர் தல், உலாவல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல் என்னும் எண்வகையானும் செல்வன. ஒலிபேதம் வெவ்வேறு பொருட்பேதங்களைப் புகுத்த வல்லது.

தன் குஞ்சுகளை இழந்ததோர் காகமும், அன்றுதான் குஞ்சு பொரித்ததோர் காகமும், காவென்று ஒரே சொல் லாற் கத்தினும், ஒலி முரண்பாட்டினல் முன்னையது துன்பக் குரல் என்றும் பின்னையது இன்பக் குரல் என்றும் யாம் அறி தல் கூடும். இங்ஙனே கவி முனிவர் ஒரே வகை ஒலிக் குறிகள் இன்பச் சுவையும் அவலச் சுவையும் தனித் தனியே பயக்கு மாறு இரண்டு செய்யுட்கள் அமைத்திருக்கின்றார். இவ்வாறு இதர நூல்களில் யாண்டேனும் உண்டோ என்னும் ஐயத்தை

அப்பாக்கள் எழுப்புகின்றன. கீழ்க்கண்ட செய்யுட்களை அச் சுவைபட வாசித்துணர்வது பேரானந்தத்தை அளித்தற் பாலது.

முதற்கண்ணுள்ள நாட்டுப் படலத்து நாற்பத்தைந்தாம் செய்யுளில் சுவாமிகள் யூதேயா நாட்டுச் சோலையை வருணிக்கின்றார். அச் சோலையின்பால் உள்ளதோர் வானளாவிய மரமொன்றில் அந்தி வேளையில் பறவைகள் கூடுகின்றன. ஒற்றுமைக்கே உறைவிடமாகப் பொருந்திய அம்மரத்திற் கூடிய வெவ்வேறினப் பறவைகள் கழிபேருவகை மிகுதியால் சப்திக்கின்றன, ஒருபால் கருகருவென்று காடைகள் கத்துகின்றன. ஒருபுடை ஞருஞருவென்று மயில்கள் அகவுகின்றன. ஒருசிறை குருகுருவென்று புருக்கள் கூவுகின்றன. ஒரு சார்பு பல பறவைகளின் குரல்கள் கூடி ஒலிக்கின்றன, மாலை நேரத்தில் இனத்தவர்களோடு கூடி மகிழும் வாழ்க்கையுடைய அப்பறவைகளின் இரைச்சல், அறிவிற் பட்டும் படாமலும் வாய்ப்பாடுகளை அறையும் மாணவச் சிறுர்கள் அடங்கிய பள்ளிக்கூடத்தினின்று கிளம்பும் இரைச்சலை ஒத்திருந்ததாம். இச் செய்தியைக் கூறு முகத்தானே,

“கருகரு வெனவொர்பால் காடைப் புள்ளினம்
ஞருஞரு வெனவோர்பால் நயந்த தோகைகள்
புருகுரு வுதலோடு புள்பல் லோதையால்
அருதுரு வுணர்வுகும் அரங்கம் சோலையே” 1/45

என்று பாடினர். ஈண்டு கருகரு முதலிய ஒலிக் குறிப்பு மொழிகளை இன்பச் சுவை பயக்குமாறு எடுத்தல் ஓசையோடு தூக்கிப் படித்தல் வேண்டும். அருது உரு உணர்வோடு சத்தம் உண்டாகும் பள்ளிக்கூடம் போன்றது அச்சோலை என ஈற்றடிக்குப் பொருள் கொள்க.

மற்றுமோர் இடம். அதுவும் சோலையே. அச் சோலையின் வழியே யேசுமரி சூசையர் ஆகிய மூவரும் ஏரோதன் நிகழ்த்தஎண்ணிய சிசுவதத்தினின்று உய்யுமாறு, இறைவ

ளிட்ட ஆணைக்கிணங்க, யூதேயா நாடு துறந்து எசித்து நாடு நோக்கிச் செல்கின்றார்கள். அஃதுணர்ந்த உணர்விலாப் பொருட்களும் துக்கம் உறுகின்றன. காவின் கண்ணதோர் மரத்தடியில் மூவரும் இருந்தமை தெரிந்த பறவைகள் அன்னவர்தம் இன்னல் நோக்கி மென்னி மென்னி அழுகின்றன. அதே குரல் கொண்டுதானே அழவேண்டும். பறவைகள் வேறு என் சொலி அழும்?

"கருகருவெனக் காடை கலுழ்ந்தன
ஞருஞருவெனத் தோகைகள் நைந்தழும்
புருகுருவுத லோடிவர் போதலால்
அருநருப்பொழில் ஆர்அழு மோதையே" 13/34

என்றார்: என்ன அழகு! இடைவிடாது வாசனை வீசி இன்பந் தருஞ் சோலைவாயிலே, அழுகை ஓசை கேட்கிறது. சதா தேனை ஒழுக்கி இனிமை யூட்டுஞ் சோலை வாயிலே அவலக் குரல்கள் ஓங்குகின்றன. அவலச்சுவை உண்டாமாறு இவ்வொலிக்குறிப்பு மொழிகளைத் தாழ்ந்த குரலில் படித்துணர்மின். அழுது அழுது தொண்டை கம்மிய காடைகள் வாயிலிருந்து கரு கரு என்றொரு குரல் கேட்கிறது அல்லது துக்க மிகுதியாலும் அழத் தெரியாமையாலும் கரு கரு என்று கலுழ்கின்றன என்க. ஞருஞரு என்னும் நச்சுக்குரல் தோகைகளின் தொண்டையினின்று வெளிப்படாநின்றது. துயரத்தால் நைந்து, அத்துயரத்தைத் தாங்க இயலாநிலையில் உகும் நஞ்சுக்குரலே 'ஞரு ஞரு' என்பது. தாய்மார் தம் சிறு குழந்தைகளை விளித்து "ஞருஞரு வென்று நச்சுப் பண்ணாதீர் (நையச் செய்யாதீர்) என்று வெருட்டிக் கூறக் கேட்டிருக்கின்றோ மன்றோ?" பின்னும் புரு "குருவுதலோடு" என்றார். சேசு மரி சூசையர் போதலை நோக்கிய புருவின் முகம் குருவியது. அக்குருவிய முகத்தோடு அது குருகுரு வென்று கத்தியது போல ஆசிரியர் சித்திரம் தீட்டியிருக்கும் செவ்விய தன்மை இதர புலவர்கள் எவர் தம் சிந்தைக்கும் எட்டாத தொன்றெனக் கூறினும் இழுக்கன்றே. எனவே, ஒரே வகைச்

சப்தங்களைக் கொண்டு இருவகைச் சித்திரங்களைத் தீட்டும் திறம்படைத்த வீரமாமுனிவர் அருளிய தேம்பாவணியின் பிற நலங்களையும் கண்டறிவது அறிவுடையோர் கடனாகும்.

*சேசுநாதர் கடவுள் என நிரூபிக்கும் உத்தானத்தின் பொழுது மகிழ்ச்சி ஒலியைத் தெரிவிப்பது 35/77*

ஒருவரு முளபல வுலகுள வதிபதி யூழுளவூழி
னறைந்து புகழ்வா
ரொருவரு மினைவன நினைவவ னுடலுட னோர்மக னுக
வியைந்த தறைவா
ரொருவரு மடிபட மிதிபட வுயிர்பட வோவிய காதை
வியந்து மொழிவா
ரொருவரு மிரவியி னொளிமிக விவனெழு மோசையி
னோகை நவின்று தொழுவார். 35/77

*திருமண வாத்தியங்களின் ஒலியைக் குறிப்பிடும்போது தேம்பாவணி ஆசிரியர்*

“முடுகு முரசொலி முடுகு முழவொலி
முடுகு முருடொலி முடிவிலாக்
கடுகு பறையொலி கடுகு கலமொலி
கடுகு கடமொலி கனிவெழாத்
தொடுகு குழலொலி தொடுகு குரலொலி
தொடுகு துதியொலி தொடுதலால்
படுகு முகிலொலி படுகு கடலொலி
படுத லிலமண மாயதே” 5/119 என்றார்.

முரசும் முழவும் முருடும் ஒருபால் மொடுமொடென ஓசைகளை முடுகினவாம். பறையும் வீணையும் கடமும் ஒருபால் கடகட வெனக் கடுகி முழங்கினவாம். குழலும் பாடுவார் குரலும்

துதிப்பார் வாழ்த்தொலியும் தொடுதொடு எனத் தொடர்ந்து கேட்டனவாம். அனைத்தும் படபட வென இடிக்கும் மேகத்தையும் கடலையும் அடக்கியதால், குறைவு படா நிலைமையில் திரு மணம் நிகழ்ந்தது என்றார். ஒலிக் குறிப்புகளுக்கு இணங்க வாத்தியக் கருவிகளை ஒவ்வோரினமாகக் கூட்டிய சதுரத்தால், இசைக்கருவிகளிலிருந்து பிறக்கும் நாதங்களின் கூறுபாடுகளை முனிவர் நனி ஆராய்ந்து அறிந்திருந்தமை புலனாகின்றது. இஃது ஓர் சாதாரண சப்த சித்திரமெனினும், இதைப் படிக்கும் பொழுதே பல்வேறு சப்தங்கள் உண்டாதலும் அவை பெருக்கெடுத்து ஓடி செவியில் படுவதும் திருமணத்தின் கெம்பீர ஆரவார நிறைவும் மனக்கண்ணுக்குத் தோன்றி மனமடங்கா மகிழ்வை யளிக்கின்றது.

## 13. உவமை முதலிய அணி நயங்கள்.

தேம்பாவணி நூலெங்கும் சிதறிக்கிடக்கும் சொல்லணிகளும் பொருளணிகளும் அளவிறந்தன. மடக்கு, சிலேடை, இரட்டுற மொழிதல் முதலிய பல்வேறு அலங்காரங்கள் காவியத்திற்குப் பேரலங்காரமாய் அமைந்துள்ளன. ஆக்கியோன் ஆங்காங்கே புகுத்தியிருக்கும் பழமொழிகள் அவரது பரந்த உலகியல் அறிவைக் காட்டும் பளிங்கன்ன மிளிர்வன. இவற்றையெல்லாம் ஈண்டு எத்துணை விரித்தெழுதினும் அவை அத்துணையும் ஆசிரியர்தம் பெருமையை முற்றும் குறித்த பாடின்றாய், குறுக்கிய பாடாகவே முடியும். ஆகலின் ஒரு சிலவே கண்டு செல்வோம்.

### 1. உவமையணி.

சிறியதொரு மேகம் கடவுளடியார் ஒருவர்தம் ஆணையால் எழுந்து, பஞ்சம் நீங்குமாறு திடீரெனப் பரந்து, மின்னி, மழை பொழிந்து, வறண்டு கிடந்த உலகை வளத்தால் அழகுறச் செய்தது. இந் நிகழ்ச்சியை ஆசிரியர் பல உவமைகள் மூலமாக அணிபட உரைக்கத் தொடங்கி

" நூல்வழி புகழே போன்று
நொடிப்பினில் பரந்த மேகம்
வேல்வழி ஒளியே போன்று
மின்னியார்த் திறைவன் அன்பின்
பால்வழிப் பயனே போன்று
பகல்இரா அளவிற் றூவிக்
கோல்வழிப் படமே போன்று
கூவெலாங் கேழ்த்த து என்றான்" 12/[18]

அதாவது, ஆக்கிய நூலின் வழியே புகழ் விரைவிற் பரவுவதுபோல அம்மேகம் பரந்தது. சிறிய வேல்வழியே கண் கூசுமாறு ஒளி பாயுமாறு அம்மேகத்திடை மின் எழுந்தது. சிறிய கடவுள் தயை பெருநன்மை பயப்பது நிகர அச்சிறு மேகம் சோனையை அளித்தது. நுண்ணிய சித்திரக் கோல் வழியே பெரிய அழகிய படம் கிளம்புமாறு அச்சிறிய மேகத்தால் உலகெலாம் அழகுற்றது என்றார்.

மேலும் மற்றோரிடத்தில் வெள்ளத்தின் போக்கைச் சொல்லா நிற்கையில், மரிய சூசையரது அன்பின் மடை திறந்து பாய்ந்த நன்மைகளைப் போலவும் தொடையறாது ஒழுங்கே செல்லும் பாவின் இயல்பைப் போலவும் நீத்தம் சென்றது என்றார் 22/[23]. "மாயிருள்விழுங்க வான்வாய் அங்காந்தெனக்" கீழ்த்திசை சிவந்தது என்றார் 20/[1] "ஒளியை ஆற்றாத வெளவால் சூரியனை விழுங்க நினைப்பதுபோல" என்பார் 29/ [113]. "மகாமேரு மலையைச் சார்ந்த காகம் பொன்னானது போல, சூசையை அண்டினோர் நல்லவர்களானார்கள் என்றும் 6/[63], "சிக்குருவை வித்தியபின் திண்காழ் அச்சாவிளைவாமோ" என்றும் 20/[24], "பால்நேரப் பாடியபண் கோகிற்கு இன்பம் பயவாப்போல்"10/[71],என்றும் கூறுவார். "பசியாற் காயும் நாய், தன்னைக் கடித்துக்கொள்வதுபோல" என்று சுரமி செய்து கொண்ட தற்கொலைக்கு உவமை கூறினார், 29/ [128]."யானையுண்ட விளங்கனி போல"க் காந்தரியாம்

காரிகை தோன்றினளாம் 10/28. செத்த பிணத்தைத் "திரி சுமந்து அவிந்த விளக்கு" என்பார் 17/43. "வாய் வழிபரவிய நஞ்சின் வண்ணமே" என்று 3/49ல் கூறியாங்கு, "வாயே யுணுநஞ் சுறுப்பெல்லா மருவி வருத்தும் வண்ணமென" 27/121, பாவிலும் அநுபவித்தார். விழுதுடைய ஆலை, விழுமிய பெரியோர்க்கு உவமை கூறினார் 12/44. உழத்தியர் கற்றோர் சொன்ன கவியின் பொருளை விரித்துப் பலரும் பயனுறுமாறு உரை செய்வாரைப்போல், தாம் கட்டின செந்நெல் முடிகளை அவிழ்த்து நன்றாய்விளையும்படி கலக்க நடுவார் என்றார் 12/51.

"காரி வாய்என நிறுவிய கமுகுஉயர் காவும்,
நாரி வாய்என நனிநரல் தெங்கெழுங் காவும்
பூரி வாய்வளை புலவர்போல் அரம்பையின் காவும்" 12/56

என்று மூன்று உவமைகளை மூன்று வகைச் சோலைகளுக்கும் பெய்துரைத்தார். மாதர் வாயைப்போல் ஓயாமல் சலசலவென்று ஒலிக்கும் தென்னந் தோப்பாம். "முதிர்சூலும் பெண்காதின் மொழியும் நில்லா முறையில்" 17/34 என்றார் வேறொரு சந்தர்ப்பத்தின்கண். என்னே இவர்தம் உலகியல் அறிவு!

எருசலேம் நகரை வர்ணிப்பான் புகுந்தவர்,

"பயனினான் மறைநூ லொக்கும் பகலினை
மணியா லொக்கும்
வியனினா லுலக மொக்கும் வேலியாற் கன்னியொக்கும்,
முயலினா லலையை யொக்கும் முனிமுனி
யென்னார்க் கொக்கும்
நயனினா லுயர்வீ டொக்கும் நகரினை யொக்கும்
வீடே" 2/6

என்றார். ஈண்டுள்ள உவமைகளின் நயங்கள் நவிலுந் தோறும் நற்சுவை நல்குவன அன்றோ!

2. உருவக அணி.

காந்தரி எனும் பெயரிய தாசியொருத்தி, தேவ மாதர் வின் திருக் கடைக்கண் நோக்கத்திற்கு இலக்காகி, மனந் திரும்பினள். அவள் காமக் கனலை வளர்க்குமாறு கைக் கொண்டுள்ள கருவிகளை ஒவ்வொன்ருகக் களைந்து எறிகிருள். அக் கருவிகளுள் ஒன்ருகிய வீணையை விளித்து, அவள்,

"பண்ணே நீயோர்முலையாய்க்
கீதம் பாலாய்ச் சுரந்தேன்
கண்ணே காத்த கனிவா லூட்டிக்
காமக் குழவி
பேண்ணே யறியா வளர்த்தேன் பெரிதாய்க்
கணையாற் சுடுமென் (று)
எண்ணேன் இதற்கே இனஞ்செய் திருந்தாய்
நீயென் ருெடித்தாள்" 10/49

வீணையைக் கொங்கையாகவும், கீதத்தைப் பாலாகவும் கொண்டு, காமக்குழவியை வளர்த்தேன். அக்குழவி பெரிதாயபின், வளர்த்தகிடா மார்பிற்பாய்ந்தாங்கு என்மீது பூங்கணைகளைப் பொழிந்தது. இவ்வாறு அது இடருறுத்த வல்லதென்பதை எள்ளளவும் எண்ணுதிருந்தேனே. இவ்விளைவுக்கு மூலகாரணமாய் விளங்கியது இவ்வீணையன்ருே" என்று கூறி அக்காந்தரி அதனை ஒடித்து எறிந்தாள். வீணை, இசை, காமம், காமவேதனை ஆகியவற்றை முறையே முலையாகவும், பாலாகவும், குழவியாகவும், கணையாகவும் உருவகப்படுத்தியமை காண்க.

3. தற்குறிப்பணி.

இயற்கையின் நிகழ்ச்சிகளைக் கவி, தன் கதை நிகழ்ச்சிகளோடு ஒன்றுபடுத்திக் கூறுவதே தற்குறிப்பேற்ற அலங்காரமாகும்.

சேசுமரி சூசையர் எரோதனுக்கு அஞ்சிப் பைதிரம் நீங்கிப் பையப் பையச் செல்லும் இரவின்கண் அந்நிகழ்ச்சியைக் காண வேண்டுமென்று அவாவியதால், வானத்தில் மீன்கள் பூத்தனவாம். இதைக் கண்டு துயருற்ற சேவற் கோழிகள் நடுயாமத்தில் மார்படித்துக் கொண்டனவாய்க் கூவினவாம். எரோதன் மேல் சீறி எழுந்தாங்கு காலைச் சூரியன் கீழ்த்திசை சிவக்க எழுந்தானும். போர்முரசின் முழக்கம் போலக் கடல் முழங்கா நிற்க, சூரியன் எழுந்து கொடிய அரசன்மேல் போர் செய்யும்படி கதிர்களை அம்புகளாக விட்டுச் சிவந்த முகத்தோடு தோன்றி, வானுலகும் அழும்படி இன்னலைப் பொறுக்க இயலாத நிலையில் இருந்தது என்று மேலுங் கூறுவார் கோதில் மொழிக் குரு முனிவர். இவ்வாறெல்லாம் இயற்கையின் நிகழ்ச்சிகளைக் கவி, தாம் வரையப் புகுந்துள்ள சம்பவத்தின்மீது ஏற்றி, இல்லாததொன்றை உள்ளதொன்ருகக் கற்பனை செய்து கூறும்பொழுது அத்துயரத்தின் மிகுதி நன்கு புலனுகின்றதன்றே?

மரிய சூசையர் தேவ மைந்தனை எருசலேம் தேவாலயத்திற்கு இட்டுக்கொண்டு போனபொழுது, எருசலேம் நகரத்தை ஆண்ட எரோதன் என்னும் மன்னனது அரண்மனைக் கொடிகள் அக்கொடுங்கோல் மன்னனது ஆட்சியின் வெம்மையை ஆற்றுவான் எண்ணி அசைந்து ஆடி, சேசு மரிய சூசையர் ஆகிய மூவரையும் நோக்கி, "இக் கொடியவன்பால் வராதேயுங்கள், நில்லுமின், நில்லுமின்," என்று நுவன்றன. ஆனல் ஆங்குள்ள தேவாலயத்தின் கொடிகளோ, "இவர்களை வரவிடுமின், விடுமின்" என்று கூறின.

எசித்து தேசத்து நடுவண் நகரதாகிய இரவிமாபுரத்தை மூவரும் சேர்வுழி.

"வரையுயிர்ப் பெனப்புகை மாட னெற்றிமேல்
நுரையுயிர்ப் பெனவிடா நுடங்கும் பூங்கொடி
உரையுயிர்ப் புருதென வொளிர்கை நீட்டியே
விரையுயிர்ப் பொடுமிவர் விளித்தல் போலுமால்" 22/28

என்றார் முனிவர். மாடங்களின்று கிளம்பிய அகிற்புகை மலைவிட்ட மூச்சு போன்றிருந்தது என உவமைத் தற்குறிப் பால் கூறினர், நுரையின் ஆவிபோல ஆடிய மென்றுகிற் கொடிகள் மூவரையும் வாய்விட்டுக் கூப்பிட்டால் அச் சொல் அவரிருந்த தூரம்வரை எட்டாதென எண்ணி, மணமிக்க தென்றலைத் தூதாகப் போக்கியும், அழகிய கரங்களை நீட்டியும், மூவரையும் அழைத்த தன்மைபோலத் தோன்றின என்றமை மிகவும் இனிமை உறுத்துகின்றது. ஈண்டு "உயிர்ப்பு" என்ற பதம் பல்வேறு உருவகப் பொருள்படுமாறு அமைந்தது இச் செய்யுட்கு மற்றும் ஓர் அணியாயுளது. கொடிகள் வாய் விட்டுக் கூப்பிடாமைக்கு ஆசிரியர் கூறும் காரணமும் அக் காரணத்தின் காரியமாய தூதும், அதுவும் பற்றாதெனக் கை நீட்டி அழைத்தமையும் கவிமுனிவரது கற்பனைத் திறனைப் பொற்புற எடுத்துக் காட்டா நின்றன.

4. ஒழித்துக்காட்டணி.

அடிகள் யூதேயா நாட்டின் சிறப்பை எடுத்து உரைக் குங்கால், அது பாலும் தேனும் வழிந்தோடும் தேசம் என்றார். அத்தகைய நாட்டின்கண் களவு எனும் பாவமுண்டு கொலோ? கிடைக்கவே கிடையாது.

"உண்டுஅ கன்றகன்று உள்ளி மேதிகள்
மண்ட அன்புறீஇ வழிந்த பால்திரள்
கொண்ட அன்னமே குடித்த லாவது
கண்டது அங்குள களவுஇது ஆமரோ" 1/24

என்றார். நாடே இங்ஙனமாயின், நாட்டின் தலைநகரின் கண் ணுள்ள மக்கள் செல்வத்தில் சிறந்து விளங்கினர்கள் என்பது கூறாமலே கூறியபடியாகும். அத்தகைய செல்வ நகரிலே

"நீரல்லது மலையில்லது நிறைவான்பொரு ளிடுவார்
போரல்லது பகையில்லது புரிவான்மழை பொழியும்
காரல்லது கறையில்லது கடிகாவலும் அறனல்
சீரல்லது சிறையில்லது திருமாநக ரிடையே"2/66 என்றார்.

அலையுந் தன்மை தண்ணீருக்கேயன்றி வேறெதற்குமிலை. நிரம்பக் கொடுப்போர் ஏற்போரை நிரம்ப வாங்கச் சொல்லி நிர்ப்பந்தம் செய்யும் போரேயன்றி, பகைப்போர் யாண்டுமில்லை. கறை, மேகத்துக்கேயன்றி மக்கட்கில்லை. அறமே காவலாய் மக்கட்குளது; அறமாகிய காவலைத் தவிர, சிறைக் காவலும் காவற்கூடமும் அங்கே அறவே கிடையாதென்றார்.

5. உயர்வு நவிற்சி யணி.

யூதேயா நாட்டினை ஒருகால் தாவீதன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவன் போர்முகத்தில் பின்வாங்காத வீரசிங்கம். மெய் முகத்திற் பொய் நில்லாதவாறு அவனைக் காண்டலும் பகைவர் அஞ்சி ஒடுவர். எனவே, "போர் செய்முனர் செயஞ்செயும் சிங்க வகையான்" 3/4 அவன் என, அவனது திறலை அடிகள் மிகைபடக் கூறுவர் அவன் சிறியனுயிருக்கையிலே, பிலித்தையர் குலத்துதித்த கோலியாற்று என்பான் ஓர் அரக்கனோடு தனிப் போர் உடற்றச் சென்றான். வில்லும் வாளும், கொல்லும் வேலும் ஏந்தி எதிர்த்த கோலியாற்றைத் தாவீதன் கவணுங் கல்லுங் கொண்டு சென்று, வஞ்சினங் கூறி எதிர்த்தான். கண்ணைத் தட்டி விழிக்குமுன் போர் முடிந்ததாம்.

"கல்லை யேற்றலும் கவணினைச் சுழற்றலு மக்கல்
ஒல்லை யோட்டலும் ஒருவருங் காண்கில ரிடிக்கும்
செல்லை யொத்தன சிலைநுதற் பாய்தலும் அன்னான்
எல்லை பாய்ந்திருள் இரிந்தென வீழ்தலுங் கண்டார்" 3/29

காண்கிலர் கண்டார் என்றின்ன இரண்டு சொற்களைச் சொல்லச் செல்லும் நேரத்திற்குள்ளேயே அப்போரும் அவ்வளவு விரைவில் முடிந்தது என்றாற்போலக் கூறினர்.

திருக்குமரன் பன்னிரு பிராயத்தின்கண் தாய் தந்தையரோடு தேவாலயத்திற்கேக, பூவும் வாசமும், தாமமும் கணியும், காவும் நிழலும், காயமும் உயிரும் போலப்பிரியாதிருந்த

பெற்ருேர், தம் மகளேப் பிரிய நேர்ந்தது. பண்டிகைக்கு வந்திருந்த திரள்மாந்தர் நடுவண் திருக்குமரன் பிரிந்து பட்டதைத் தாயார் அறிந்த பொழுது, அவள், தந்தையோடு மகன் இருக்கலாம் என்று எண்ணினுள். இருவரையுஞ் சிறிது நேரங்காணுத தாதையாகிய சூசை, தன் குழந்தையும் தாயும் ஒன்ருக இருக்கலாமென்று சின்னேரம் வாளா இருந்தனன். பிறகு இருவரும் கூட்டத்திடையில் சந்திக்க, சூசை, தன் துணேவியைச் சுற்று முற்றும் பார்த்தான்; துணேவி கணவனேப் பார்த்தாள்.

"உன்னிடை யிலேகொல்என் றிவளும் ஓதினுள்
நின்னிடை யிலேகொல்என் றவனும் நேடினன்
என்னிடை யிலேயென இருவர் சாற்றினர்
மின்னிடை யசனிபட் டெனவெங் தேங்கினர்" 31/17

"இலேகொல்? இலேகொல்?" என வினக்கள் எழுந்தன. 'இலே இலே', என்று விடை விழும் முன்னர் இருவரும் மின்னிடை அசனியென வெந்தார், ஏங்கினர் என்று உயர்வு நவிற்சிக்கண் விரைவின்மிகுதியைச் செவ்விதின் காட்டிப் போந்தனர் கவிஞர்.

6. தன்மை நவிற்சியணி.

அணிகளுள் தலேசிறந்து விளங்குவது இவ்வணியே. ஏனெனில் உள்ளதை உள்ளவாறே, மிகையுங்குறையும் அற, ஈடும் எடுப்பும் இல்லாதே, கூறுவது இவ்வணியின் இலக்கணமாம். தேம்பாவணி முழுமையும் இவ்வணி பரந்து கிடக்கின்றது.

எரோதன் ஆகிய ஏந்தல், சிசுவாகிய தேவ குமாரனேக் கொல்ல நினேத்தவன், பெத்லகேம் பதிக்கு அருகிலுள்ள பைங் குழந்தைகள் அனேத்தையும் கொல்லுமாறு ஆணேயிட்டனன். பாலர்களுடைய தாய்மார்களேத் தேடித் தேடிச் சேவகர் சென்று, இல்லின்கண்ணே கொலேத் தொழில் நடாத்தினர்.

அப்பொழுது ஒரு தாய் தன் குழந்தையை மறைக்கும் இடந் தேடி மலேந்து நிற்கின்ருள். சேவகர் அவ்வில்லம் நோக்கி வருகின்றனர். சிந்தை சிதறுண்ட தாய், ஆதுலம் எய்தி, மறைவிடம் தேடி அங்கு மிங்கும் அலேந்து, ஓரிடத்தைக் கண்டு பிடிக்கின்ருள். தாயின் துடிப்பையும் துயர வதனத்தையும் கண்ட குழந்தை தன்னுயிரைக் காத்தல் பொருட்டே அவள் செயுங் காரியத்தை உணர்கில்லாது கீச்சுக் கீச்சென்று அழுதது. அழுகைக் குரலின் அடையாளங் கண்டு விரைவிற் போந்த சேவகர், அக்குழந்தையை உடனே கொன்று எறிந்தனர். குழந்தைகளின் வதத்தைக் கூறவந்த ஆசிரியர், சிறு குழந்தைகளின் தன்மையை நன்கு அறிந்தவராதலின், அத்தன்மையைச் சம்பவத்தின்மீதேற்றிக் கூறினும், அங்ஙனம் நடந்திருத்தல் கூடியதே என்று நம்பக்கூடிய நிலேயில் கூறியமை தன்மை நவிற்சியின்பால் பட்டதேயாம்.

தவிர, சேலேகள், நதிகள் முதலிய பொருட்களேயும், கோபம் முதலிய குணங்களேயும் கூறும் பல இடங்களில் ஆசிரியர் உள்ளதை உள்ளவாறே உரைப்பதைக் கண்டு உவகை யுறலாம். சுரமி என்பாள் ஒரு கிழவி, தெய்வ பயம் அற்றவளாய்த் தன் மனம்போல நடந்து, தற்கொலே செய்து நரகுக்கு ஆளானவள். அக்கிழவியின் படத்தை ஆசிரியர் அழகுபடத் தீட்டுவார் ஆகி,

"கூனுருக் கோலில் ஊன்றிக் குலுங்கிய சென்னி
ஆட்டி,
ஊனுருக் கழிந்த நீள்தோல் உடுத்தளன்பு ஒழுங்கில்
தோன்றி
மீனுருக் கழிந்த கண்புண் மெலிமுகச்
சுரமி என்பாள்" 29/

என்ருர். ஆஹா! எத்துணே சிறந்த வருணனே. இது முற்றும் தன்மை நவிற்சியேயாம். அத்துணேயும் முதுமைப் பருவத்தின் குறிப்புகள். குறிப்புகள் ஒன்ருே, பல. 1. கூன்

உரு. 2. கோல் ஊன்றல். 3. குலுங்கிய சென்னி. 4. ஊன் உருக் கழிந்த தோல். 5. நீண்டு நான்ற தோல். 6. தோலே பொதிந்த என்பு. 7. எண்ணப்படுமாறு ஒழுங்கில் தோன்றும் எலும்பு நிரை. 8. மீன் ஒத்த வடிவு இழந்த கண். 9. மின்னல் ஒளி இழந்த கண். 10. குழி விழுந்தும் பீளை சொரிந்தும் புண்ணைத் தோன்றிய கண். 11 மெலி முகச் சுரமி— எனப் பதினொரு குறிப்புகளையும் பண்பட்ட சில சொற்களால் பகர்ந்து போந்த திறம் மிகமிகப் பாராட்டற்கு உரியதன்றோ·

இவ்வாறு இன்னும் பல அணிகளைக் காவியம் புனைந்து கவினுற்று ஒளிர்வது கற்போருக்குக் கழிபேருவகை தர வல்லது. அவற்றை எல்லாம் அறைவதற்கின்றி, இவற்றோடு முடித்துக் கொள்வாம்.

## 14. அறன் வலியுறுத்துமாறு:—

1. கொல்லன் தெருவில் ஊசிக்குப் பஞ்சமிருந்த பாடில்லை. சேசு மரி சூசையர்களை அடிப்படையாகக் கொண்டெழுந்த இக்காவியத்தின்கண் அறநெறி உரைகளுக்கும் ஒழுகலாறுகளுக்கும் நிரம்ப இடம் உண்டே. கிறிஸ்தவ தர்மங்களின் சிறப்பினைத் தெளிவுறுத்தலும் போலி தர்ம ஒழுக்கங்களையும் அதர்ம வழிபாடுகளையும் ஒழிவுறுத்தலுமே இக் காவியத்தின் இலட்சியமாகும். தவிர, தேம்பாவணியின் ஆசிரியர் இல்லறம் படியாத நல்லற யோகி. நாட்டைத் துறக்கும் தன்னலமிலாராய், மக்கள் மாட்டுள்ள அன்பைத் துறவாது மக்கள் நலத்தையே விரும்பி உழைத்த மாபெருங் கிறிஸ்தவ துறவி. இத்தகைய நிலையில் துறவறம் பூணுது, நாட்டை அறவே விட்டு விட்டுக் காட்டை அடைவது எளிதான துறவு ஆகும். மேலான கிறிஸ்தவ துறவியின் இலக்கணம் இன்னது என்பதை வீரமாமுனிவர்

“கான்வளர் தவத்தைக் கானில்
கண்டெளி தடைவார் மற்றோர்
தான்வளர் தவத்தைக் கூட்டித்
தமர்க்கெலாம் நகரிற் காட்டல்

வான்வளர் வலமை பூத்த
மாண்பிதே இதுநின் பாலாம்'' 4/43

என்று ஓதிய அடிகளான் உணர்வுஉறுத்திப் போந்தார். "கானகத்துத் தவத்தை ஒருவன் நாட்டகத்துக்கு அழைத்து வந்து, தனக்கும் பிறர்க்கும் நலஞ்செய் நிலையில் அதனை ஆங்கு நாட்டுவித்தல் வேண்டும். அதுவே மாண்பும் வல்லமையும் மிக்கது, வானுலக நலமும் பயப்பது. பிற மானுடரை விரும்பாமலும் அவர்களுக்குத் தொண்டு ஆற்றாமலும் வானுலக பதவிக்கு வழிகோலும் துறவறம் மேலான கிறிஸ்தவ தவ வொழுக்கம் அன்று'' என்று, அச்செய்யுள் வலியுறுத்துகின்றது.

எனவே. தலைசிறந்த துறவியாகிய வீரமாமுனிவர்தம் முன்னிலையில் போலித் துறவிகளுக்கு இடமுண்டுகொல்? வேடங் கொண்ட அனைவரும் விழுத்தகு வேதியர் ஆவர்கொல்? மனத்துக்கண் மாசிலனாதலை விடுத்து, இனந்தெரிவான் கொண்ட பல்வேறு கோலங்கள் வேண்டும் பயனைப் பயக்குங் கொல்?

"கோலமே வீணடா குளித்தல் வீணடா
சூலமே வீணடா துறவு வீணடா
காலமே மந்திரங் கதைத்தல் வீணடா
சீலமே கெடநசை செகுத்திலால்'' 20/127

என்று கூறினராதலின், சீலங்கெடுக்கும் ஆசையின் வேர் அறுக்காமல் புறக்கோலம் பூண்பதெல்லாம் வீண் என்றார்.

"வீடுற வேண்டில்நீ விதித்த நூலலால்
காடுற வொளிக்குதல் கயங்கு ளிக்குதல்
நீடுற விழுசடை நீட்டல் மற்றவை
ஈடுறப் பயனிலா வெளிறு இதாம்'' 20/123

என்று கூறு முகத்தானே, "மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்" என்ற திருவள்ளுவர் கருத்தே இவர்தம் கருத்து என்றும் அறியலாகின்றோம். சூசை முனிவரால் தடுத்து ஆட்கொள்ளப் பெற்ற சிவாசிவன் என்பானது வாய்மொழி வாயிலாக,

"உற்றகோலம் வீணடா ஒண்தவங்கள் வீணடா
கற்றநூலும் வீணடா கையுதாரம் வீணடா
பெற்றபேறும் வீணடா பேரறங்கள் வீணடா
மற்றயாவும் வீணடா மண்ணைப்போற்ற லாலடா" 27/[131]

என்று, ஆசிரியர் மீண்டும் கூறிப்-புறக்கோலமெல்லாம் வீண் என்பதை வலியுறுத்துகின்றார்.

2. தெய்வப்புலமைத் திருவள்ளுவர் பணிவுடைய இன் சொலனுதலே ஒருவற்கு அணி என்றும், கண்ணுக்கழகு கண்ணோட்டம் என்றும் கூறினர். இனைய நற்குணமுடையராய் சூசையும் மரியும் விளங்கினர் என்பதை,

"நாக்கணங்கு கனிந்து நவின்றசொல்
நோக்கணங்குகண் ணோட்டம் நொதுத்தகை
யூக்கணங்குஇடுந் தானமென் றுள்ளுவார்
கோக்கணங்கொடு வோங்கு குலத்தினர்" 9/[38]

என்னும் பாவினாற் பகர்ந்தனர். 'நாவிற்கு அணங்கு (அழகு) கனிந்த சொல். நோக்குக்குஅழகு கண்ணோட்டம். மலர்போலும் மென்மைவாய்ந்த கைகளுக்கு அழகு தானம்' - என்று கூறின முனிவர் பின்னும் இதனை வலியுறுத்துவான் வேண்டி,

"பண்ணழகா மின்குரல்போல் அழகாம்
நாவிற் பனிச்சொல்லே
விண்ணழகாம் பெய்துளிபோ லழகாம்
சீர்க்கு விளைகொடையே
கண் ணழகாங் கண்ணோட்டம் என்ன
வீயாக் காட்சியொளி
நண்ணழகாந் தவவிளக்குஉள் ளெறிப்பக்
கண்டான் நடந்தொத்தான்" 27/[40]

என்றார். தொபியின் கூற்றாக வருமிச்செய்யுள் அம்மூன்றுண்மைகளையும் விரித்துக் கூறினது. வீணைக்கழகு இன்குரல்போல, நாவாகிய வீணைக்கழகு ஈரமொழி என்றும், மேகத்திற்கழகு மழைபோல, செல்வத்திற்கழகு மேகம்போற் கொடுத்தலே என்றும் கூறித், தவத்தின் பெருமையையும் சுட்டுவாராயினர்.

3. அறம் விளக்கும் நல்லொழுகலாறுகளையும் அறத்திற்குமாறான மறச் செயல்களையும் வீரமாமுனிவர் முன்னதை மக்கள் கைக்கொள்ளுமாற்றானும் பின்னதை விலக்குமாற்றானும், ஒரு முறைக்குமேல் மற்றொரு முறை, கூறியது கூறலாகவரினும், அவ்வழுவிற்கும் இடனின்றி, வெவ்வேறு படியில் நின்று வலியுறுத்திக் கூறுவதைக் காவியம் முழுவதும் பரக்கக் காணலாம். காமத்தையும் அதன் கேடுகளையும் வாய்ப்பு நேரும் இடமெல்லாம் முனிவர் கூறியுணர்த்தும் இயல்பினர். ஏனெனில் கொல்லும் வேலினும் கொடிய நஞ்சினும் கொடியது கோதையர்மேற் கொண்ட தீயவாசையன்றோ! அஃதுடையாரது

"சிலையின் மேன்மையும் சீர்த்தியுஞ் சீலநன்
னிலையின் மேன்மையும் வாழ்க்கையு நீதமும்
கலையின் மேன்மையும் காமநி னைத்தகால்
உலையின் மேல்வழுது ஒத்துஎரிந்து இற்றவே" 26/174

என்ற முனிவர் பின்னும்,

"காதல் மிகவே கற்றபல கல்வி எவன்செய்யும்" 28/23

எனவுங் கூறினர்.

4. செல்வத்தின் நிலையாமையைக் கூறுங்கால்,

"நீரெழுங் குமிழி போலும் நெடியதேர் நேமி போலும்
காரெழு மின்னல் போலும் கடலெழுந் திரைகள்
போலும் 26/96

என்று நான்கு உவமைகளோடு நன்கு நவின்றனர் எனினும் இக்கூற்றினேடு அமையாமல், பின்னுமோரிடத்தில்,

" மின்னிழல் எனமிளிர்ந் தொழி வெறுக்கைசெய்
கொன்னிழல் வெறுத்தறங் கொண்டு நின்றியேல்
நின்னிழ லெனநினே யிறைவன் நீங்கிலாது
இன்னிழ லியற்றிநீ யினிதில் வாழ்கென்ருன்" 29/[123]

எனச் சூசையின் வாக்காக அணிபடக்கூறி வலியுறுத்திப் போந்தார். முன்னர் செல்வத்தின் நிலையாமையை மட்டுங் கூறினவர், இங்கே அச் செல்வம் மின்னலைப்போல் மிளிர்ந்து ஒழிதலான் வெறுத்தற் பாலதென்றும், அதனை வெறுத்து நல்லறம்பற்றி நிற்பின் நம்மொடு நீங்கா நிழல்போல ஆண்டவனது அருள் நிழற்கண் நாம் என்றும் இனிதின் வாழலாம் என்றும், இயம்பா நின்றனர்.

5. மனிதன் நல்லுணர்வு பெற்று, நல்லொழுக்கமாகிய அறங்களை விதைத்து, வானுலகடைய விரும்பினும்,

" ஆசையே ராகப் பூட்டி யறிவழித் துளஞ்சே ருக்கி
ஓசையே கலங்க வீக்கி யுழுதுபல் புரையே வித்தி
மாசையே முதல்பல் வாழ்வின் வளர்பயிர் முகத்தைக் காட்டிக்
காசையே யுதவாப் பூதிக் கனல்விளைவு இயற்றும் பேயே" 27/[12]

ஆதலால்,

" ஊக்கவேர் பூட்டி நோன்பால் உடற்செறு வுழுது நன்றி
வீக்கமேல் விரதச் செந்நெல் வித்திநல் லொழுக்க நீரைப்

போக்கநீ ரிறைத்துத் தன்னைம் பொறியெனும்
வேலி காக்கில்
ஆக்கமாய்ப் பெரும்வீட் டின்பம் அண்டமேல்
விளைக்குந் தானே" 26/111

என்றார். பேய்கள், மனிதர் மனத்தில் ஆசையை எழுப்பிக் குற்றங்கள் பல விதைத்து, பொன் முதலாம் வாழ்வைத் தந்து, புல்லுக்கும் உதவாப் பொருளின் ஏதுவால் நரகத்தீயுள் அவர்களைப் புகுத்துவிக்கும். இவ்வாறு முனிவர் பேயின் கோளாறு கூறி, அதற்கு எதிராக நாம் கோடல் செய்தலாகும் ஒழுகலாற்றையும் கூறிப்போந்தார். எனவே சாத்தானது வஞ்சக வலையில் சிக்காமல் தவமே தஞ்சமெனக்கொண்டு வாழ்ந்த தவமுனிவர், வானுலகு அடையக் காட்டிய நெறி அனுபவத்தின்பாற் பட்டதென அறுதியிட்டு அறையக் கிடந்தது அன்றோ!

## 15. கட்டுரை அழகு.

1. 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்' என்று பெரியோர் கூறுப. சித்திரக்காரன் சித்திரத்துள் கையினால் அழகைப் புகுத்துகின்றான். காவியக்காரன் நாவினாற் பாவிற்குள் அழகைத் திணிக்கின்றான். சாதாரண உரைநடை, கல்வியில் கீழ் நிலையில் உள்ளாரை நோக்கி உரைக்கப்படுதலில், ஆங்குப் பல்வேறு அழகுகளையும் கற்பனைத் திறங்களையும் கூட்டி உரைப்பது நம்மவர்க்கு வழக்கம் இல்லைபோலும். ஆனால் காவியமோ கற்றோரை நோக்கி உரைக்கப்படுதலின், ஆண்டு கற்பனை விற்பனங்களும் பல்வேறு அணி நலங்களும் செறிந்து காணப்படுகின்றன. இத்தேயத்துச் செந்தமிழ் வல்லார் கற்றறிதல் வேண்டும் என்ற பெரு நோக்குடன் வீரமாமுனிவர் தேம்பாவணியாந் தெய்வ காவியங் கண்டார். ஆதலின் முன்னோர் உரைத்த காவியப் பண்புகள் முற்றும் பெற்று விளங்க, அவர் இச்சீரிய காவியத்தைச் செய்யத் துணிந்தார். எனவே அவர் தாம் செந்தமிழ் மொழியில் எய்திய நந்தாப் புலமைத் திறம் அனைத்தையும்

இக்காவியத்தின்கண் பெய்துள்ளார். அவரது புலமைத் திறம் எனைத்து என்று அளந்தறிய இக்காவியம் ஒன்றே போதியது. ஆனல் அனைத்தையும் எடுத்து ஓதல் எளிது அன்று.

2. நாட்டுப் படலம், நகரப் படலம், ஆகிய இரண்டும் வருணனைப் படலங்களேயாம். ஆண்டுள்ள வருணனைகளில் சில படித்த மாத்திரத்தில் விளங்கிடும்; சில, சொற்களைக் கடித்துச் சுவைத்தபின்னரே, மனதிற்கு இன்பந் தரும். தொகைநிலைத் தொடர்களும் தொக்கு மொழிகளும் விரவி வரும் செய்யுட்கண் வேண்டிய சொற்களை வருவித்துப் பொருள் கோடல் வேண்டும். தேம்பாவணியில் இத்தகைய செய்யுட்கள் செறிந்துள்ளன. சில ஆற்றொழுக்காகப் பொருள் கொள்ளக் கிடப்பன; அவைகள் சிரமமின்றிச் சுவை பயப்பன.

"புள்ளி மால்வரை பொன்னுல கிடத்தெடுத் துய்த்தல்
உள்ளி வான்விடும் வடம்எனத் தாரைகள் ஒழுக
வெள்ளி நீள்துடர் விசித்ததைப் பிடித்தெனச் சூழத்
துள்ளி வீழ்உயர் தூங்கிய அருவியின் தோற்றம்" 1/5

இச்செய்யுள் ஆற்றொழுக்கு நடை வாய்ந்ததே. "யூதேயா நாட்டு மலையை வானுலகுக்கு எடுத்துச் செல்லுவான் கருதி வானவர் இட்ட வடம் போலும் மழைத் தாரைகள் தோன்றின. அவ்வாறு எடுத்துச் செல்லாவண்ணம் பூமாதேவியோடு பிணித்துக் கட்டிய சங்கிலிகள் போல அருவிகள் தோன்றின" என்ருர். ஈண்டு ஆசிரியரது கற்பனைச் சக்தியும் கட்டுரைத் திறனும் கவினுற விளங்கா நின்றன. ஆனல்,

"மேல்வளர் அலர்ப்படம் விரித்து வீணைசெய்
பால்வளர் சுரும்பிசை பாட மாங்குயில்
வால்வளர் மயில்நடங் காண மற்றைப்புள்
சால்வளர் நாடக சாலை சோலையே" 1/46

என்ற காலையில், கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளும் நிலை ஏற்படுகின்றது. மரங்களில் கொத்துக் கொத்தாக மலர்கள் தொங்குகின்றனவாதலின், அது அரங்க சாலையின் முகட்டிற் கட்டிய சித்திரப் படத்தை நிகர்த்தது என்பார், "மேல் வளர் அலர்ப் படம் விரித்து" என்ருர். அதன்பின், "பால்வளர் சுரும்பு இசையோடு வீணை செய்யா நிற்க" என்று கொண்டாலன்றிப் பொருள் புலன் ஆகாமை காண்க. 'இசை பாட' எனச் சேர்த்துப் பொருள்கொள்ளின், 'மாங்குயில் பாட' என்ற சொற்ருெடர் பொருளின்றிக் கொன்னே நிற்கும். ஏனெனில் இசையோடு சுரும்பு வீணையை மீட்டுகிறது. குயில்களே வாயினல் பாடுகின்றன. வீணைகானத்திற்குச் சுரும்பையும், வாய்க்கானத்திற்குக் குயிலையுங் கொண்டார். இரண்டும் வாய்கொண்டு இசைப்பனவே எனினும் சுரும்பு வாய்திறந் திசைப்பது வெளியே தோன்ருதன்ருே! அடுத்தபடியாக, "வால்வளர் மயில் நடம் ஆட், மற்றைப்புள் அதனைக் காண" என்றெடுத்தல்வேண்டும். 'ஆட' எனும் சொல்லை வருவித்துக் 'காண' எனும் சொல்லைப் பிற்கொணரின் பொருள்தெளிவு உண்டாம். எனவே, 'அலர்ப்படம் மேற் கட்டி; சுரும்பு வீணை; குயில் வாய்ப் பாட்டு; மயில் நடனம்; புட்குலம் பார்த்திருப்போர்'. இத்துணை அமிசங்களும் பொருந்திய நிலையில் சோலையானது இயற்கையில் அமைந்ததோர் நாடக சாலையாம் என்ருர். இட்டும் தொட்டும் கவ்வியும் மாந்திய பின் மாந்துதற்கு அரிய சுவையை இச் செய்யுட்கண் துய்க்கின்ருேம்.

3. ஏனைய ஆசிரியர்கள் எழுதிப்போந்த காவியங்கட்கும் இதற்கும் இடையிட்டதோர் முரண்பாடொன்று உண்டு. ஏனைய காவியங்கள் அகப் பொருள் புறப் பொருள் இலக்கணங்களைத் தழுவிச் செல்வன. இலக்கியங் கண்டபின் இலக்கணம் தோன்றினும் பின்னையோர் எழுதிய திருச்சிற்றம்பலக் கோவை, திருவெங்கைக் கோவை, வில்லிப் புத்தூரார் பாரதம், சேக்கிழார் புராணம் முதலிய காவியங்கள் எல்லாம் முன்னையோர் கூறிப்போந்த இலக்கணங்

களைப் பின்பற்றியே எழுதப்பட்டன எனின், பெரும்பாலும் இழுக்காகாது, ஆனல் தேம்பாவணியாம் காவியம் அகப் பொருள் இலக்கணத்துள் அமைவதொன்று அன்று என்று முன்பே யாம் கூறினம். எனவே, ஈண்டு ஈரறம் ஓரறமாகப் பொருந்தி இல்லற துறவிகளாய் இயைந்த காவிய நாயகனையும் நாயகியையும் வருணித்து எழுதுவது கஷ்டசாத்தியமே ஆகும். தேவ கன்னியாகிய மரியம்மையார் உலகிலேயே உருவிற் சிறந்த பெண்மணியார். அழகுக்கே கொள்கலமாய் விளங்கிய அம்மாது சிரோமணியின் அழகை வருணிக்கும் முறை யாது? அம்முறை வேருகத்தானே அமைதல் வேண்டும். தேவமாதா வின் திருமேனி அழகை ஆசிரியர் வருணிக்கும் முறையைச் சற்றே பாருங்கள்.

"பல்லும் விழியும் பவளத் திதழும்
சொல்லுங் கனியஞ் சொலும் ஒண் ணுதல்கொள்
வில்லுங் கரமும் வீரிசீ றடியும்
செல்லுந் திசைசெல் லுறழ்செல் லருளே" 5/92

தேவமாதா இத்திருவோடு திகழினும், "அவள் செல்லுமிட மெல்லாம் மேகம்போலுங் கருணைமழை சொரிந்து சென்ருள்" என்ருர். இத் திரு உரு, ஆடவர்தம் மனத்துள் யாதாம் தீய எண்ணத்தை உண்டாக்கிற்ரே என்ருல், அற்றன்று.

"காமக் கனல்ஆற் றினநோக் கியகண்
வீமக் கருள்விட் டனமூ டியகண்
ஏமக் கதிகாட் டும்விழித் திருகண்
வாமக் கதிர்வாட் டுகளித் தகணே" 5/90 என்ருர்.

இத்தகைய திருவிற் பொலிந்த பிறமாதர்களுடைய கண்களைக் காவியப் புலவர்கள் வருணிக்கும்ஆறு நமக்குத் தெரியும். திருமகள் போலும் திருப்படைத்த பிற மகளிர்தம் சொற்கள் அம்பெனச் சென்று ஆசையில்லார்க்கும் ஆசையை மூட்டி

ஆருயிரையும் அடுதற் பாலன என்பார்கள் புலவர்கள். ஆனல் தேவமாதாவின் சொற்களோ அத்தன்மை உடையன அன்று என்று முனிவர் வெட்டவெளியாகக் கூறுவதைக் கேண்மின்

"வில்லே வியகோல் விழியார் அறைதீஞ்
சொல்லே யுயிர்உண் ணெனவே சொலுவார்
கொல்லே தம்இலாக் குதலைச் சொல்நலாள்
நல்லே யுயிர்காக் கும்நவின் றசொலால்" 5/91

தேவமாதாவின் குதலைச் சொற்கள் கேட்டார் தம் உயிரைக் காப்பனவாம். எனவே, இவ் வருணனைகள் தேம்பாவணியின் காவிய நாயகியின் நிலைக்கு ஏற்றவாறு எத்துணைப் பொருத் தத்தோடு அமைந்து செல்கின்றன! இன்னபடி ஈரறம் ஓரற மாக நடாத்திய தலைவன் தலைவியர்களையும் அவர்களது வாழ்க் கைச் சித்திரங்களையும் ஆசிரியர் தம் அரிய கற்பனை சக்தியால் கட்டுரைத்துச் செல்லுந் திறம் மட்டுக்கு அடங்கா மகிழ்ச்சி யைத் தராநிற்கும். இவ்வகையில் ஆசிரியர் அடைந்த வெற்றி விளம்பும் தரமுடையதன்று.

4. எசித்து தேசத்தில் அடிமையாயிருந்த யூதர்கள் இறைவன் அருளால் விடுதலை பெற்றுத் தங்கள் சுயநாட்டுக்குச் சென்றனர். எசித்து தேசத்து அரசன் அரை மனத்தோடு யூதர்களுக்கு விடுதலை அளித்தவன் அவர்களைத் தொடர்ந்து சென்று சமர் புரிந்தான். யூதர்கள்பால் அன்புடைய இறை வன் ஓர் வானவனை எசித்திய படைகளை எதிர்த்துக் கொல்லு மாறு ஏவினன். செங்கடல் நடுவண் சிக்கிய எதிரிகள் மீது வானவன் ஓர் வாளி எய்தனன். உடனே திரள் கும்பலாய் நின்ற செருநர் யாவரும்

"பிரிவார்தமின் எரிவார்கறை பிளிர்வார்வதை பெறுவார்
முரிவார்அலை புகுவார்உள முனிவார்துயர் முதிர்வார்

எரிவார்உடல் கரிவார்இறந் திழிவார்இடை யிடையே
ஒருவாளியெய் யருவாயின வொருவானவ
னுரனுல்" 14/52

என்றுர். அவ்வானவன் பின்னுமோர் அக்கினி அஸ்திரம் விடுத்தான். உடனே களமெல்லாம் அழல் மயம்.

"அழலக்குய வழலக்கரி யழலப்பரி யயிலோ (டு)
அழலக்கதை யழலத்தனு வழலச்சர மசியோ (டு)
அழலக்கிடு கழலப்புதை யழலப்படை யெவையும்
அழலக்குடை யழலக்கொடி யழலத்திரம் விடவே" 14/54

"குயவு(தேர்) அழல, கரிபரிகள் அழல, வேல், கதை, தனு(வில்), சரம், அசி(வாள்), கிடுகு (கேடகம்), புதை (அம்பின் கூடு) அழல, படை எவையும் அழல, கொடி குடைகள் அழல, அத்திரம் வந்தது" என்றுர். முந்தைய செய்யுளில் வினைமுற்றுக்களை அடுக்கியவர் பிந்தியதில் ஒரே வினையெச்சத்தை யாண்டும் செருகினர். அக்காலையில் "வெம்மைக்கு ஆற்றுது கடலில் விழுந்த தேர்கள் விரித்த பாய் அழிந்து கவிழ்ந்துவிழுங் கப்பல்கள் போல் தோன்றினவாம். மத யானைகள் அலறிக் கடலிலே புகுவது சூரியன் வானத்து எழுந்து வருகையில் கடலிலே புகுந்த இருளைப் போலத் தோன்றின வாம்," 14/55. "அரசர் தம் மார்பிலிருந்து அற்று விழும் மணிகள் விண்வீழ்கொள்ளிகள் போல் தோன்றினவாம்." 14/56. இவ்வாறு சமர்க்களத்தை வரைதற்கண்ணும் கவி முனிவர் குறைபாடு இலராவர்.

5. "குட்டியைப் பறிகொடுத்தவனுக்குச் செடி மேல் எல்லாங் கண்" என்பது ஆயர் பழமொழி. அனையவாறு பன்னிரண்டாம் வயதில் தேவாலயத்திற்குக் கூட்டிக்கொண்டு போன பாலகனைப் பிரிந்த தேவமாதா தெருத்தோறும் திண்ணைதோறும் தேடி அலைகிருள். ஆவிதாங்காது தாவியோடி ஓர் வாவியை அடைந்து,

"தேன்தோய் மலர்தீட் டியசே டுலவிக்
கான்தோய் தடமே களிகூர்ந் துனைநேர்
வான்தோய் எழில்தோய் மதுமா றிலபூத்
தான்தோய் எனதுள் தடமோங் கினதே" 31/48

"ஓ, தடாகமே! நானும் நின்போற் களிகூர்ந்துவப்ப, என் நெஞ்சமாகிய பூந்தடாகத்தில் தேவமலர் ஒன்று பூத்திருந்தது. நானிருக்கக் கொள்ள அம் மலர் எங்கே போயது?" என்று அலமந்து பின்னும்,

"அன்னச் சிறைநீ யலர்தா மரைநான்
என்னச் செறியின் பொடிருந் தனமே
முன்னச் சியதேன் முருகில் லதெனு
மன் அச்(சு) சவியோய் வனமே கினையோ" 31/51

"யான் ஓர் தாமரை மலராய் இருக்க, மகனே நீ அதன் கண் வீற்றிருக்கும் அன்னப்புள்போலுந் திகழ்ந்தனையே. நீ முன்பு விழைந்த முருகு இம்மலரிடத்தில்லை யென்றுணர்ந்து, அழியாத அழகுடைய நீ மனத்தாமரையின் நீங்கி வனத்தாமரை நாடி அன்றனையோ? நீ அவ்வாறு நீங்கிச்செல்வதை என் கண்கள் காணுதிருந்தமை என்னே? என்று கூறி வருந்தி, அவள் தன்கண்களை நோக்கி,

"கயலாம் விழியே கடலா மவனே
அயலா டலிலா கியகன் றனனே
இயலா தவிடுக் கண்இயைந் தினிநான்
உயலாம் வழியொன் றுளதேல் உரையீர்" 31/58

"என் கண்களே, நீங்கள் ஒரு கயல்மீனுகவும் அவன் ஒரு பெருங்கடலாகவும் அவனிடத்து எந்நேரமும் ஆடாது இருந்தீரென்றலவோ பிரிந்து போனன். இனி அடையாத துன்பங்களை அடைந்து நானுயிர் பிழைக்கும் வழியுண்டாகில் காட்டக்கடவீர். என் கண்கள்தான் காணவில்லை. மறவாத என்

நெஞ்சு மறதியைப் பேணியதென்? என் நினைவில் அவனைப் பேணாத நிமிஷம் இருந்தமையாலன்றோ நீங்கினன்'' என்று புலம்பி நைந்த தன்நெஞ்சை நோக்கி,

"மஞ்சே மருளா மதுவே குறையா
விஞ்சே டவிழ்வீ யனைவிள் முகனை
நெஞ்சே நனிபே ணிலநீங் கினனே
நஞ்சே யினியுண் டுணநைந் தழல்வாய்'' 31/59

என் நெஞ்சமே, அழகுகெடாமலும் மதுமாறாமலும் பொன் இதழ்விரித்த மலர்போல் மலர்ந்த முகநல்லானை நீ நன்றாய்ப் பேணாமையால் அல்லவோ நீங்கிப்போனான். இனி நீ உண்பதற்கு அமிர்தமின்றி நஞ்சினை உண்டு நைந்து வாடி வெந்து கிடப்பாயாக'' என்று கூறி வியாகுலம் அடைந்தாள். இப் புலம்பல் வருணனை கல்நெஞ்சையும் உருக்கவல்ல கவின் கொண்டு, பேரதிசயத்தை விளைவிக்கின்றது. வியாகுல மாதாவின் பெருக்கெடுத்து ஓடும் துயரைச் சுருக்கமான சில பாக்களால் முனிவர் விரித்துணர்த்திய வகை மூதறிவாளர்தம் கற்பனை சிந்தையையும் கடந்ததொன்று அல்லவோ?

6. தேவ மாதா, தன் மகனைத் தேடி அலையாநிற்புழி, மற்றொரு பெண், அவள்பால் குறுகி, ஆவலித்து, "அம்மா! நின் மகன் எத்தகையன்? அடையாளம் கூறுதி'' என்க, தேவ மாதா தன் திருக்குமாரனை வருணிக்கும் முகத்தானே அடிகள் அருளிய செய்யுட்கள் சொற்சுவையும் பொருட்சுவையும் ஆன்று விளங்குவன. அவையாவன:

1 "பாவிதந்த மகற்குரி பான்மைகேள்
வாவிதந்த தண்தாமரை வாயினன்
காவிதந்த களிப்புமிழ் கண்ணினன்
ஆவிதந்த வருவருட் சொல்லினன்.

2 பானுயிர்த்த கதிர்ப்படப் பங்கியான்
வானுயிர்த்த மதிப்பட நெற்றியான்
தேனுயிர்த்த முல்லைச்சிறு மூரலான்
கானுயிர்த்த மலர்முகக் காமரான்

3 பொருளில் வீங்கிய பொச்சைப் புயத்தினன்
அருளில் வீங்கிய ஆர்கலி மார்பினன்
தெருளில் வீங்கிய சீர்முகிற் கையினன்
சுருளில் வீங்கிய தோடலர்த் தாளினன்.

4 ஈரஞ் சாம்வரு டத்திரண் டாண்டுளான்
நீரெஞ் சாஅரு ளான்நிறை மாட்சியான்
காரஞ் சாவொளி காட்டிய காட்சியான்
சீரெஞ் சாவுரை வெல்லுயர் சீர்த்தியான்.

5 முகத்தின் தாமம்மு கிழ்ந்தெனப் பார்த்தகால்
அகத்தின் தாமரை யுள்ளவிழ் கண்ணினன்
செகத்தின் பாசறை தேய்ந்துள மின்புறச்
சுகத்தின் தாய்வினை துற்றிய வன்பினன்.

6 நளிமுகத்தலர் நல்கிய தேனென
அளிமுகத்தவன் சொல்லறைந் தால்பகல்
ஒளிமுகத்திருள் ஓடிய வாறுபோல்
விளிமுகத்துறும் வெந்துயர் நீங்குமால்.

7 உனக்கிசைத்தினி யென்னுரைப் பேன்இவண்
தனக்கெதிர்த்துஇணை தானில னுகையால்
நினக்கெதிர்த்துநின் றுலறி வாய்என
எனக்கியற்றருள் தாய்இவை சாற்றினள்'' 31/கு-71

இவ்வேழு பாடல்களையும் ஏழு முத்துக்கள் எனலாம். இயேசுவானவர் தன் பன்னிரண்டாம் பருவத்து இலக்கணங்கள் முழுவதையும் தன்னுள்ளடக்கிய தோர் சிறந்த இலக்கியச் சித்திரம் இது. புகைப் படமெனினும் ஓவியம் எனினும் இத்துணை தெளிவான நிலையில் பன்னிரு வயதுப் பாலகனுகிய சேசு சுவாமியைக் காட்ட வல்லனவோ? 'பாவி தந்த மகற்குரி பான்மை கேள்' என்ற ஆரம்பமும், எனக்கியற்றருள் தாய் இவை சாற்றினுள்' என்ற முடிவும் முடிவில்லாப் பொருளின் பத்தைப் பொதிந்து நிற்பன. தேவமாதாவின் வியாகுலமும் அவ்வியாகுல மாதாவின்கண் அருந்தவ முனிவர் கொண்டுள்ள அடிமைத்திறமும் வெள்ளிடை மலைபோல விளங்கா நின்றன. மாதாவின்பால் அடிமை பூண்டொழுகிய வீரமாமுனிவர் சூசையிடத்தும் அத்தகைய அடிமைத்திறம் பூண்டிருந்த செய்தியைத், திருமணப் படலம் 145-ம் செய்யுளில் "நான் அடுத்து இறைஞ்சும் அவரே" என்று கூறிப் போந்தமையால் தெளிக.

7. எசித்து நாட்டை ஏர்உறச் செய்வதும் ஆங்கு ஏர்த்தொழில் நடைபெறச் செய்வதும் நீங்காத நீர்ப் பெருக்கு எடுத்தோடும் நீல நதியே ஆம். கொழித்த அலைகளோடு பசிய பொன்னை அளிக்கும் அவ்வாற்றின் பரிசுதனைப் பாவாணர் உரைப்பான் புகுந்து,

"பொய்செலச் செல்லும் வாயில்
பொலிவொடு பெருகும் போல
மைசெலச் செல்லும் வாரி
மருளிவந் தளவிற் பொங்கி
மெய்செலச் செல்லு நன்றுத்
தெங்கணும் விளைவித் தோடி
பைசெலச் செல்லு நாகப்
பரிசெனச் செல்லு மாறே" 21/2

என்றார். மழை பெய்தலால் ஓடிய பலகால்களோடு கலந்து ஆற்றின் வெள்ளம் பொய்போலப் பெருகி ஓடி, மெய்போ

லும் நன்மைகள் விளையும்படி செய்தது என்றியம்பிய புலவர் வெள்ளத்தின் வேகத்திற்கும், வளைந்தோடும் தன்மைக்கும், படம் விரித்துக்கொண்டு வளைந்து செல்லும் பைநாகத்தை உவமை கூறினர். படம் விரிக்கும் பாம்பு தலையை உயர்த்திக் கொண்டும் சீறிக்கொண்டும் கோடிக்கொண்டும் செல்வது இயல்பு. அவ்வாற்றின் நீரோட்டமும் அவ்வியல்புடைத்து என்று உள்ளத்தில் பதியுமாறு உரைக்கும் திறம் ஒரு சில புலவர்க்கே உரித்தாகும்.

8. தியாகத்தை உணர்த்தும் சின்னமே சிலுவையாகும். அச்சிலுவையின் பெருமையை அறைவதென்றால் அளவிறந்த உரைமலிந்த தமிழ் மொழியாலும் சாற்ற ஒண்ணுதே. அச் சிலுவையை முதன் முதலாகக் கண்ணாரக் கண்டு களித்த திருக்குமரன், தியாகத்தினல் விளைதலாகும் சர்வாங்க துன்பங்களைச் சற்றேனும் கருதிலராய், அதனை வாழ்த்தத் தொடங்கி,

"ஏரணியே என்னன்பே என்னன்பிற் கிரதமிதே
சீரணியே உயர்வீட்டைத் திறக்குங்கோ லிதேயின்பத்
தாரணியே எங்கணும்நான் ஆண்டோச்சும்
செங்கோலே
பேரணியே எனதுயிரின் பேருயிரே
வாழியவே" 30/119

என்றார். சேசுநாத சுவாமியின் வாய்மொழியாக வீரமா முனிவர் திருச் சிலுவையின் பெருஞ் சிறப்பை யெல்லாம் செய்யுளொன்றிலேயே பெய்துரைத்த பரிசு பாவலர்க்கும் பக்தர்களுக்கும் பெருவிருந்து அளிக்கும் பண்புடைத்து அன்றே'

9. தேம்பாவணிக்கு அணியாய் விளங்கும் இன்னன வருணனைகளும் கட்டுரைகளும் இன்னும் பல உள. அவற்றுள், 1. ஆலய வருணனை 2/39. 2. அகழி வருணனை 2/8: 3. இயற்கை வருணனை 4/6, 21/14. 4. நடுநிசி கண்ட நகர

வருணனை 13/9, 5. காந்தரி வருணனை 10/30, 6. பாலை வருணனை 19/1. 7. இத்தலி வருணனை 32/23. 8. வியன்னு நகர வருணனை 36/81–95, முதலியன மிகவும் இன்புறுத்துவன. சலப்பிரளயம், சோதோமின் அழிவு, சிசுவதம், திருமணம் முதலியவற்றைப் பற்றிய பாக்களும் கட்டுரைகளும் பகரவொண்ணு இன்பம் பயப்பனவேயாம். ஒருவாறு குறித்துப் போந்த அவ்விடங்களைக் காவியத்திற் கண்டு பிடித்து, அப்பகுதிச் செய்யுட்களை எல்லாம் பதமுறச் சுவைத்துப் பார்ப்பாரது இதயம் பேரின்பம் அடையும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

## 16. பொருள் அழகு.

1. அதிசயமான அவதாரம் ஒன்றே; அது கடவுள் மனித அவதாரமெடுத்த சேசுநாதரின் திரு அவதாரமே. ஆரம்பம் முதல், எல்லாம் அதிசயமே. "அதிசயமானவர்" என்று ஏசாயா தீர்க்கத்தரிசி சொன்னதோடு அமையாமல், "இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்" என்றும் கூறிப் போந்தார். இந்தத் தீர்க்கத் தரிசனம் நிறைவேறுவதற்குக் கருவியாயிருந்த கன்னிமரி யம்மையார் காலம் நிறைவேறியபோது,

"உலக மூன்றினும் உவமை நீக்கிய
இலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்
அலகில் மூன்றினுள் நடுவ மைந்தனை
நிலவு மூன்றினும் நிறப்ப என்றனள்" 10/94

"வாய்ப்படாநுழை பளிங்கின் வாய்கதிர்
போய்ப்படாவொளி படரும் போன்றுதாய்
நோய்ப்படாதுஅருங் கன்னி நூக்கிலா
தாய்ப்படாவயத்து அமலன் தோன்றினன்" 10/95

கிறிஸ்துவானவரின் அதிசயப் பிறப்பையும், பிறப்பின் போது அக்கன்னியின்பால் விளங்கிய அதிசயத் தன்மைகளை

யும், அதிசயமான பதங்களாலும் உவமையொன்றாலும் முனிவர் மொழிந்தார். 'இல ஐ மூன்று, எனும் சொற்றொடர்தானா இலயை மூன்று என்று காணப்படுகின்றது? ஆயின் அது 'இலவை மூன்று என்றே இருத்தல்வேண்டும்; இலஐமூன்று அல்லது இலா ஐமூன்று—யாருக்கும் இல்லாத அழகு மூன்று என்க. அம்மூன்று அழகினுங் குறையாத கன்னியாய் ஈன்றனள் கன்னித்தன்மையிலும் இழிவுபடாத நிலையில் ஈன்றனள் என்று கொள்க. இல ஐ மூன்று எவை? மைந்தனைப் பெறுமுன் உள்ள அழகு, மைந்தனைப் பெறும்போதுள்ள அழகு, பெற்றபின் உள்ள அழகு, ஆக மூன்று அழகுகள் என்றாரா? இம்மூன்று நிலையிலும் சாதாரணமாய்ப் பெண்களது அழகு மாறுந்தன்மையுடையது. பிள்ளை பெறுமுன்னரே வயாத் தோன்றிப் பெண்களது அழகைக் கெடுக்கும்; பசலைநிறத்தை யுண்டாக்கி, வெளிவரச் செய்து, அழகில் மாறுதலைக் காட்டும் பிள்ளை பெறும்பொழுதோ வருத்தமும் நோவுந் தோன்றி அழகிற் பேதம் உறுத்தும். பெற்றபின்னரோ அழகை அறவே இழந்து பெண்கள் "ஒரு பிள்ளை பெற்றால் ஓரிக்கிழவி" என்னும் பழமொழிக்கு எடுத்துக் காட்டாகவும் விளங்குவர். ஆனால் கன்னிமரியம்மையாரோ இம்மூவழகிலும் குறையாத கன்னியாய் ஈன்றனள். எனவே, வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும் ஈன்றபின்னர் யாதேனும் ஒரு பேதமும் இல்லாத கன்னியாய் விளங்கினள் என்பதையே "இல ஐ மூன்றிலும் இழிவில் கன்னியாய்'' எனும் சொற்றொடர்களால் குறித்தாரா? "இலயை மூன்றிலும் இழிவில் கன்னியாய்'' என்பதற்கு அழிவுபடும் காலங்கள் மூன்றிலும் அழியாத கன்னியாக எனச் சிறப்பாகப் பொருட்படும் என்பதுங் காண்க. இவ்வடிக்கு பொழிப்புரையாளர் பொருள் கூறிப் போந்தமையாலன்றி இப்பொருள் காண்பது அரிது. உவமை நீக்கிய'' என்ற சொற்றொடரோடு கன்னியும் மைந்தனும் என்ற இரண்டு பெயர்களும் பொருந்தற்பாலன. உலகம் மூன்று, இலஐ மூன்று, அலகில் மூன்று, நிலவு மூன்று எனத் தொடுத்தது எதுகைகளை அழகுறச் செய்தது. 'நிலவு மூன்றிலும் நிறப்ப ஈன்றனள்' எனவே, முச்சுடர்களின் ஒளி முழுதும் திரண்டாலும் அவ்வொளிக்கு ஈடாகாது என்பது

பெற்ரும். உலகின் ஒளியை எல்லாம் பழிக்கும் ஒளியாய் உலகிற்குப் புத்தொளி காட்டும்படி தேவகுமாரன் தோன்றினர் என்ருர். அளவிடப்படாத மூன்றனுள் அளவிடப்படாத நடுமை ஓர் கர்ப்பமாகிய அளவுக்குட்பட்டது என்பார் 'அலகில் மூன்றனுள் நடுவமைந்தனை' என்ருர். அளவிடப்படாத பரம் பொருளை 'மூன்று' என்று அளவுபடுத்துவதும் 'நடு' என்று எல்லை கட்டி அளவு படுத்துவதும் குற்றம் என்ருலோ வெனின், அற்றன்று. அளவிடப்படாத ஒரு தேவசுபாவத்தில், ஒரு கடவுள் வேத வெளிப்படுத்தலால் அறிவிக்கப்பட்டபடி மூன்ருன ஆள்களுக்குள், அளவிடப்படாத தேவசுபாவம் வாய்ந்த இரண்டாம் ஆளாகிய சுதன், ஒருவாறு அளவிடப் படும் மானுடத் தன்மை எடுத்தமை நோக்கியே, நடுவண் மைந்தன் எனப்பட்டார் என்க, எனவே, அலகில் மூன்று என்பது அளவில்லாத கடவுளாகிய ஒருவரில் மூன்று ஆட்களே என்றே பொருள் கொள்ளக் கிடந்தது. "உலகம் மூன்றினும் உவமை நீக்கிய மைந்தன்" என்றமை யேசுநாதரின் அவதாரத்தின் பெருமையைக் கூறியபடி. அம்மைந்தனை "உலக மூன்றினும் உவமை நீக்கிய, இலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்" என்றமை மாதாவின் பெருமையைக் கூறியபடி.

வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும் இன்றிக் குழந்தை ஒன்று தாய் வயிற்றில் பிறக்குமா? என்று கேட்டால், "கடவுளால் ஆகாத காரியம் ஒன்றுமில்லையே" என்று எளிதாகக் கூறிவிடலாம். ஆனல், 'அலகில் மூன்றனுள் நடுவமைந்தன்' எவ்வாறு கர்ப்பத்துள் உதித்தான், எவ்வாறு வெளிப்பட்டான்? வயாவும் வருத்தமும் இல்லாமற்போனது ஏன்? என்ற கேள்விகளுக்கு விடையாகத் தைரியநாதர் தைரியத்தோடு ஒரு உவமையை அடுத்த கவியிற் காட்டுகிருர். கன்னிமரியம்மையார் தூய பளிங்கு. தூயதோர் பளிங்கினுள்ளே பிரகாசமான சூரியனின் கதிர் ஒன்று சென்று, அப்பளிங்கின் வாசலைத் திறவாமலே அதனுள் நுழைந்து, எட்டுணையும் குறைவு படாத காந்தியைப் பிரதிவிம்பமாக விரித்துக் காட்டுவதை நாம் பார்த்திருக்கிரேம். அதுபோலவே'

"அலகில் மூன்றினுள்" சுதனாகிய சர்வேசுரன், வாசலைத் திறவாமலே கன்னியின் கர்ப்பத்துள் மனித சுபாவமெடுத்து, அவளுக்கு யாதொரு நோவும் வருத்தமுங் கொடாமல் மைந்தனாக வெளிப்பட்டார். குறைவுபடாத காந்தியோடு பளிங்கினது தன்மைக்கு ஒப்ப சுதனாகிய நடுவன் மனித சுபாவத்துடன் வெளிப்பட்டார் என்றார். இந்த உவமை மிகவும் பொருத்தமானது. பௌதீக சாஸ்திர சம்பந்தமான இவ்வுவமையை விரித்துக் கூறக் கூறப் பொருள் செறிந்து இலங்கற்பாலது. ஆதலின், இதனைப் பல்கால் ஊன்றி உணர்ந்து இவ்வுவமையிற் பொருந்திய பல் நயங்கள் யாவையும் சிந்தித்துத் தெளிந்தால் சிந்தை கடந்த இன்பமும் ஆசிரியர் கூறிய இவ்வுவமையின் சீர்மையும் நாம் கண்டு களிக்கலாம்.

2. எரோதன் பகைக்கு அஞ்சி சேசு மரி சூசையர் ஆகிய மூவரும் தம் சுய நாடாகிய யூதேயா நாடு இறந்து, எசித்து நாடு நோக்கி ஏகாநிற்புழி, எழில் தாமரை மலர்கள், தம் ஏடுகளைக் குவித்துப் 'போகாதீர்' எனப்புகன்று, மூவரையும் தடுப்பன போல் காணப்படுகின்றன. அதைப் பொருட்படுத்தாமே மூவரும் கானகம் புக்குக் கடிதின் நடந்து செல்வதைக் கண்டு வருந்துவனபோல, விண்மீன்கள் வெட்டி வெட்டி மிளிர்கின்றன. துயர்பொறுது இரவெல்லாம் மார்பு அடித்துக் கூவிய சேவல்கள் நான்காந் தடவையும் விட்டபாடின்றி, விறைப்பும் விறுவிறுப்புங்கொண்டு கூவுகின்றன. வானம் கண்ணீர் விட்டாங்கு பனிபெய்ய, அதைக்கண்ட காவின் தருக்களும் வருத்தக் கண்ணீர் வடிக்கின்றன. வைகறைநேரங்கண்டு வானம் கீழ்த்திசையில் வெளுக்கின்றது. அதுபோது குளிர் மிக்க கூதிர்காலம். அவனியைக் காக்க அவதரித்த நாதனைக் காப்பாற்றுமாறு, இதுகாறும் கண்ணிமைபோற் காத்துவந்த சூசையும் மரியும் அக்கூதிர்ப்பருவக் காலைவேளையில் படர்ந்து செல்வது பார்த்து,

"கிளியழக் குயில் கேட்டழத் தேன்உணு(து)
அளியழச் சிறை நைந்தழ ஆவென

வளியழத் துயர் மல்கி வனத்தெலா
வுளி அழத் தக வோர்அழ வேகினர்''. 13/35 என்றார்

'சொற்றிரியினும் பொருள்திரியா வினைக்குறை' எனும் இலக்கண விதிக்கு இணங்க, ஈற்றில் வந்த 'அழ' எனும் செயவென்னெச்சத்தை 'அழுது' எனும் எச்சமாக்கிக்கொண்டு, 'தகவோராகிய சூசையும் மரியும் அழுது ஏகினர்' என்று பொருள் கொள்க. இச்சந்தர்ப்பத்தில் தகவோராகிய சூசைமரியர் அழுது ஏகாநிற்க, வான்முதலாய இயற்கைப் பொருட்கள் யாவும் துயர் அநுபவிக்கின்றன. வானவரும் துயரம் உற்றனர் என்றும் கூறியவர் மண்ணோர்க்கும் மன்னவர்க்கும் 'இவர்கள் யார்' என்பதும் 'வனத்திற் செல்வது ஏன்" என்பதும் தெரியா ஆகலின் அவர்களைப்பற்றி யாதேனுங் கூருது ஒழிந்தார். இதுதான் கவி சமர்த்து.

மேலும் முதலாவது அழ ஆரம்பித்தது கிளியென்றார். சொன்னதைச் சொல்லி மகிழ்வுறுத்தும் தன்மை வாய்ந்ததும் மக்களால் பெரிதும் பாராட்டப்படுவதுமான கிளியை முதற் கண் வைத்தார். கிளியழ என்று கிளத்தியவர் குயில் கேட்டழ என்று கூறுவானேன்? குயில் மாரிகாலத்தை விரும்புவதில்லை. கூதிர்கால விடியல் நேரத்தில் குயில், தன் குதுகுலத்தை இழந்து, தலையைச் சிறைக்குள் வைத்துக்கொண்டு சோம்பலுற்று, நிகழ்ந்ததை அறியாவண்ணம் இருக்கக், கிளி அழுத பின்னரே நிகழ்ச்சியை, அக்குறிப்பால் அறிந்து அழ ஆரம்பித்தது. எனவே "கிளி யழ, அதைக்கேட்டுக் குயில் அழ" என்றார். 'மாரிநாட் கூவும்குயிலின் குரல் இன்ன' என்றபடி, கீதம் இனிய குயில் அவ்வைகறையில் இன்னக் குரல் எடுத்து அழுத வண்ணமே கூவியது. ஆதலின் உண்மைக்கு மாறுபடாத இயற்கைச் சித்திரத்தை ஆசிரியர் இங்கே காட்டுகிறார். தேன் குடித்து யாழன்ன இசைக்கும் வண்டுகள் அவ்விடியற்கண் பூக்கள் மலரா முன்னர் செய்த ஓசை, அரற்று மோசையை நிகர்த்தே விளங்கிற் றென்க. சிறை என்பது சிறப்புப்பற்றி அழகிய சிறைகளையுடைய அன்னப்பட்சிக்காயிற்று. மரிவயின் நடை கற்ற

விழையும் அன்னப்பட்சி, அவள் துரிதமொடு செல்லும் இயல்பலா நடையைக் கண்டு, விஷயம் உணர்ந்து, நின்ற இடத்திலேயே நின்று அழுதது என்க. ஆவென உடலைத் துளைக்குமாறு வடக்கிலிருந்து வந்த வாடைக் காற்று, துய ரத்திற்கே கொள்கலனயிருந்தமையால், அழுகுரல் செய்த வாறு வீசிக்கொண்டிருந்தது. இன்னும் வனமெல்லாம் பனி மயமாயும், வனத்துள்ள மரங்களும் மற்றவைகளும் நீர்த் துளிகள் படியப்பெற்றனவாயு மிருந்தபடியால், அவைக ளெல்லாம் அழுவனபோலவே ஆயின. ஆக, எல்லாம் உண் மைக்கு மாறுபடா இயற்கைச் சித்திரங்களே. "வனத்து எலா உளி"— வனத்திலுள்ள எல்லா இடங்களும், இடத்தில் உள்ள பொருட்களும், மூவரும் சென்ற வழி நெடுக அவர் களை உள்ளி, அழுதன எனப் பொருள்படக் கிடந்தமை அறிக.

3. சோதும நகரும் அதனையடுத்த ஐந்து நகரங்களும் இறைவன் ஏவிய அக்கினிமாரிக்கு இரையாகி வெந்தன. வானத்தினின்று வீழ்ந்த தீயும் அந்நகர மக்களது அக்கிரமத் தீயும் ஒருசேரக் கலந்து, விண்ணும் மண்ணும் வெந்துபட்ட தைக் கவிஞர் கூறத்தொடங்கி,

"மேகங்கள் வேக விடுமீன்கள் வேக
இடியேறு வேக மீளிரும்
மாகங்கள் வேக ஒளிவேந்தன் வேக
மனமஞ்சி மேகம் மறைய
ஆகங்கள் வேக விழிகண்கள் வேக
அறைநாவும் வேக அலைகொள்
வேகங்கள் வேக நதிவேக ஏக,
வெருவாக வேலை யகல" 14/134 என்றார்.

அக்கினியால் உண்டானதாங் கரிய வெப்பத்தால் வெந்த பொருட்கள் பல. அவைகளை ஒவ்வொன்றாகக் கூறுவான் புகுந்தவர், "மேகங்கள் வேக", "மனமஞ்சி மேகம் மறைய'

என்புழி, முன்னையது மழை மேகம், பின்னையது புகை மேகம் என்று பொருள்கொள்ளக் கிடந்தது. எவ்வாறெனில், காட்டுதும். 'ஒளி வேந்தன்' ஒளியையுடைய வேந்தன் ஆகிய சூரியன் என்றும், ஒளிக்கின்ற வேந்தன் ஆகிய சூரியன் என்றும் கவர்படு பொருள்பட நின்றது. ஒளி வேந்தன் வேக மனத்துள் அஞ்சிப் புகை மேகத்துள் மறைந்து பார்த்தது எனத் தற்குறிப்பு வாயிலாகக் கூறினர். எற்றிற்கு எனின், அக்கினியால் உண்டான பெரும் புகையானது கார்மேகம் போலப் பகலோனை மறைத்துக்கொண்டது. வேளாவேளைகளில் கார்மேகத்துள் ஒளிக்கும் தன்மை வாய்ந்த சூரியன் புகைமேகத்துள் மறைந்து கொள்ளலாமா என்று உன்னிற்று என்க. மீண்டும் மனத்திகில் கொண்ட கார்மேகம் வேகப் பயந்து வெப்பத்தினல் ம றை ந் து பட்டும், மேல் வரை எழும்பிய தீ மேகத்தோடு சூரியனையும் வேகச்செய்ததுஎன்க,

பின்னர், நதிகளின் அலைகொள் வேகங்கள் வேக நதி வேக என்று கூறியவர் மீண்டும் ஏக என்று கூறினராகலின், எது ஏகிற்று என்ற வின எழும்பா நின்றது. நதிகளின் நீரோட்ட வேகங்கள் வெப்பத்தால் நின்றன. பின்னர் நீர் எல்லாம் சுண்டிப் போக நதி வெந்தது என்ருர். பின்னர் நதியின் சுடுமணல் உருகி ஆருக ஓடிற்று என்பது பெற்ரும். ஈண்டு, வெப்பத்தின் சிகர நிலையை ஆசிரியர் காட்டினர். அதன்மேல் நதி வேக ஏக, வெருவாக வேலையகல என்றமையின் பொருள்யாதோவெனின்,நாயகியாகிய நதியைத் தழுவும் நாயகனுகிய கடல் தன் நாயகி வேற்றுருவத்தோடு வரக் கண்டு வெருவி அ க ன் ற து என்க. எவ்வாறு அகன்று சென்றமை புலனுயிற்றெனின், கடலைச் சுற்றியுள்ள மணல் மேடுகளும் நதியின் முகத்துவாரமும் வெப்பத்தால் உருகி வரக்கண்ட கடலானது யாதாம் ஒன்றைக் கண்டு வெருவுகின்றவன் அலறி ஓடுவது போல, சுறுசுறுவென்று வற்றிக் கொண்டு பின்வாங்கிப் போயிற்ருகலின், புலனுயிற்றென்க. ஆகங்கள் வேக, விழிகண்கள் வேக, அறை நாவும் வேக எனக் கூ று வா ர் எற்றிற்கெனின், மக்கள் தம் உடல் உறுப்புகள் முதலில் வெந்தன என்றும், விழிக்கின்ற இமை

களோடு கண்மணிகள் பின்னர் வெந்தன என்றும், ;சுடுதே சுடுதே' என்று ஓலமிட்ட ஈரப்பசையுள்ளநாவும் பசையற்றுக் கடைசியில் வெந்தன என்றும், எனவே, எல்லா உறுப்புக் களும் ஈரம்புலர்ந்த கறியாகக் கருகி வெந்தன என்றும் பொருள்படக் கூறினர் என்க. விண்ணிலிருந்து பெற்ற அக்கினி மழையாகலின், முதலில் விண்ணில் உள்ள பொருள்கள் வெந்தமை கூறி இரண்டாவது மண்ணில் உள்ள பொருட்கள் வெந்தமை விளம்பினர். என்ன அழகு!

4. எசித்து தேசத்தை நீத்து, யேசு மரி சூசையர் ஆகிய மூவரும் அங்குள்ள நண்பர்பால் பிரியா விடை பெற்றுக் கொள்ளாமலும் ஒருவருக்கும் தெரியாமலும் ஆரிருட் கங்குல் போதே அகலுவாராயினர். காலையில் இரவிமாபுரத்து மக்கள், மூவரையுங் காணது தவித்து அவர்களைக் கண்டு பிடித்துக் கொணர்வான் கருதிக் கானகம் நுழைந்தனர். அவர்கள் மூவரையும் தேடித்தேடி அலைந்து அலமந்து,

"மயில்காள் அளிகாள் வரிகாள் சிவல்காள்
குயில்காள் கிளிகாள் கொடிகாள் உரையீர்
எயில்காள வனத்தி ணையெஞ் சநலோர்
வெயில்கா ளம்மறைந் தெனமே விடமே" 30/23
"வரையீர் புனலே மழையீர் வரையே
விரையீ ரமரு விரிபூந் தடமே
சுரையீ ரமலர்த் தொடைசூழ் பொழிலே
உரையீர் உயிரின் உயிருள் ளுழியே" 30/24

என்று ஓலமிட்டனர். இரவிமாபுரத்து மக்கள் கானகத்தின் கண்ணுள்ள மயில்களையும் வண்டுகளையும் காடைகளையும் கௌதாரிகளையும் பார்க்கின்றனர். அவைகள் புனிதராகிய மூவர் தம் இருப்பிடத்தை அடைந்து இருந்தமையானும் இரவிமாபுரத்து மக்கள் தம் துயரத்தை அறியாதிருந்தமை யானும் அகம்களியுற்று அலைகின்றன. அதையுணர்ந்த மக்கள்

அன்னவற்றைநோக்கி, " எம்மூர் சுடுகாடாகும்படி, திடீரெனக் கதிரவன் கார்மேகத்துள் கரந்துபடுவது நிகர, எம்மை விட்டு மறைந்த நல்லோர் எங்குளர்''? என்று வினவினர். 'எம்மூர் சுடுகாடாகும்படி' என்று அவர்கள் கூறும் சொற்க ளின் கருத்தென்ன? காரணமென்ன? இது, அடுத்த கவியில்தான் தெளிவுறும். எங்ஙனமெனின், 'உரையீர் எம் உயிரின் உயிருள் உழியே'' என்றமையால். ''எம் உயிர்க்கு உயிர் அவர்கள். அவர்களின்றி எம்முடல்களெல்லாம் அழிந்து பட எம்மூர் காளவனத்திற்கு இணங்க, எஞ்சா நிற்கும் அவர்களைக் காணுது நாங்கள் அங்கே சென்ருலும் உயிர் வாழோம். இங்கே இறந்தாலும் அங்கே பாழாகும்'' என்ற பொருள் நயம் பொதிந்துள்ளது,

இரண்டாவது செய்யுளில் 'ஈர்' என்ற மொழியைத்திரி பணி வாயிலாக நுழைத்ததும் அதனல் கிடைக்கும் பொரு ளழகும் மிகவும் இன்பத்தைத் தாரா நின்றது. "வரை ஈர் புனல், மழை ஈர் வரை'' என்ருர். மலையையும் மலையிலுள்ள கற்களையும் மணிகளையும் இழுத்துச் செல்லும் தன்மை வாய்ந்தது அருவி. மேகத்தைத் தன்பால் இழுக்கும் தன்மை வாய்ந்தது மலை. எனவே, இரவிமாபுரத்து மக்கள், வெற்றுடம்பு: அவ்வுடம்பு ஈண்டு உயிரை இழுத்துச் செல்ல நாடுகிறது என்று பொருள்படுகிறதன்ரே! ஒன்றையொன்று இழுத்து இயைந்து நீங்காமல் நிற்கும் இயற்கைப் பொருட் களையே மேலும் மேலும் காவியக்காரர் காட்டிச் செல்வதை நோக்குழி, கவியின் உள்ளக் கருத்து நமக்குப் பெருங் களிப்பை அளித்தற்பாலது. வாசனையும் ஈரமும் அருத பூந்தடம். சுரை ஈண்டு உபலக்ஷணப் பெயர்; சுரை முதலிய மரங்களின் ஈர மலர்த்தொடை சூழ் பொழில். மலருக்கும் வாசனைக்கும் தண்மைக்கும் பிரிவில்லை. சோலைக்கும் சோலை மரங்கட்கும் ஈரமலர்களுக்கும் பிரிவு ஏற்படுமோ? ஏற்பட்டால் பூவைப் பூ என்னலாமோ? சோலையைச் சோலை என்ன லாமோ? அவ்வாறே, நாங்களும் பிரிந்துபடில் பிராணிக ளின்றிப் பிணங்களாவோம் என்றபடி.

5. காந்தரி என்பாள் ஓர் விலை மாது. அவள் மாலை வேளையில் தன்னை ஆடை ஆபரணங்களால் நன்கு அணி செய்து ஊரைச் சுற்றி வருவாள். இவளது கண்வலையிற் பட்ட காமுகர் பலர். மாலை வேளையில் இவளைக் காணும் நல்லோரும் மனமாலை உற்று இவள்மீது மையலுறுவர். இவளது நடையழகும் உடையழகும் பாவனையழகும் இனையன என்று முனிவர் மொழியுந் திறத்தை இப்பாவிற் காணலாம்.

"புலம்பும் ஓதையின் நொந்தெனப் பொன்னிடச்
சிலம்பு மேல்வலச் சீறடி யூன்றிவில்
அலம்பு னைந்தபொற் றூணயல் பொன்மலைத்
தலம்பு னைந்தமின் சாயலொத் தாளரோ" 10/30

"நொந்தாற்போல புலம்பின இடக்காலின் பொற்சிலம்பு மேல் வலக்காலையூன்றி நின்று கதிரை மாலையாக அணிந்த பொற்றூண் அண்டையிற் சாய்ந்து பொன்மலையிற் சாய்ந்த மின்னலின் சாயலாக நின்றாள்" என்பது இதன் பொழிப்புரை.

நொந்தெனப் புலம்பும் சிலம்பின் ஓதையோடு காந்தரி நடந்தாள். சிலம்பு புலம்பும் ஓதையினால் நொந்தவள்போல நடந்தாள் என்க. உடம்பின் பாரத்தைத் தாங்காது நொந்தமை நிகரப் புலம்பும் சிலம்பின் ஓலச கேட்க நடந்தவள் புலம்பினலன்ன ஓசையிடும் சிலம்பின் ஓசையை வெறுத்தவள்போலவும் நடந்தாள். போதல் யாவர்க்கும் புலனுமாறு சிலம்பின் ஓசையைக் காட்டியும் காட்ட வெறுத்தவள்போல அடிமேலடி வைத்துக்கொண்டும் தாளம் போட்டுக்கொண்டும் சென்ற நடையை முனிவர் மிகவும் நுட்பமாகப் படம் பிடித்திருக்கிறார். ஓசை கேட்டல் வேண்டுமென விழைந்து பொன் இடச்சிலம்பின் சீறடியைத் தூக்கியும் குலுக்கியும், கேளா வண்ணம் செய்பவள் போலவும், செல்ல விரும்பாதவள் போலவும் அம்மி நகர்ந்தாலன்ன, அடிமேலடி வைத்து ஊன்றியும் சென்றாள் என்க. சென்றவள் சென்றுகொண்டே இருந்தாளா? எப்படிச் செல்வாள்? எல்லோரும் அவளை

நின்று பார்த்தல் வேண்டுமென்றன்ரே அங்ஙனம் செல்கின்ருள். அவள் வில்லலம் புனைந்த பொற்றூண் அயல்போய்த் தன்னைச் சார்த்திக்கொண்டாள். அவள்தான், தன்னைச் சார்த்திக்கொண்டாளா? அன்று, கவி அவளைச் சார்த்தி வைக்கிருர். எற்றிற்குச் சார்த்தினர்? வெளியே வந்தால் தூணைச் சார்ந்து நிற்பது நாணமுடைய குல மகளிரது இயல்பு. புற நானூற்று எண்பத்தைந்தாம் செய்யுளில் அங்கே பெண் ஒருத்தி தன் தலைவன் செய் போரைப் பார்க்க அஞ்சிலம்பு ஒலிப்ப ஓடி இல்முன் நின்ற முழவுபோலும் பனை மரத்தைப் பற்றி நின்று பார்க்கிருள். அச்செய்யுளின் அடியில் "யாதொமொன்றைச் சார்ந்து நின்று ஒருவரைப் பார்த்தலும், அங்ஙனம் நின்று ஒன்றைக் கேட்டலும் குல மகளிர்க்கு இயல்பு" என்று உரையாசிரியர் கூறுகின்ருர். அங்ஙனம் கேட்டதற்கு எடுத்துக் காட்டாக அடுத்த செய்யுளில் "சிற்றில் நற்றூண்பற்றி நின் மகன் யாண்டுளனே" என ஒரு மங்கை மற்ருெரு மங்கையை வினவுதல் காண்க. காந்தரி குலமகள் அல்லளே எனின், குல மகள்போல நடிக்கின்ருள் என்க. அவ்வாறு நடித்தற்கு ஏனையகாரணங்களும் உள. ஒரு காரணம் முன்பே கூறியுள்ளோம். பிறகாரணங்களைக் கூறுமுன்னர் அவள் எத்தகைய இடத்தில் அணைந்துகொண்டாள்என உற்றறிதல் வேண்டும். பாழான குட்டிச்சுவர்மீது சாராமல் வில்லலம் புனைந்த பொற்றூண் அயல் போய்ச் சார்ந்தாள். சார்ந்து நின்ற பொற்றூண் சார்வதற்கு மிகவும்பெருந்தியதோர் இடமாகத் தென்பட்டது. சார்ந்ததன் வண்ணமாவது பொருட்கு இயல்பு. ஆதலின் கதிரொளி வாய்ந்த பொற்றூணைச் சார்வதே நிற்றற்கு ஏற்ற இடமெனக் கொண்டாள் என்க. தற்கால சினிமாப் படங்களில் பெண் ஒருத்தியின் முதுகுக்குப் பின் அழகியதோர் கம்பமேனும் பூஞ்செடியேனும்கொண்டு படம் பிடித்துக் காட்டுகிற வண்ணம், காந்தரியின் படத்தைக் கவிஞர் பிடித்துக் காட்டுகிருர். முதுகுக்குப் பின்னுள்ள தல விசேடத்தால் அழகற்ற பெண்ணும் அழகுடையவளாகக் காணப்படுவாளன்ருே! காந்தரி வில்லலம் புனைந்த பொற்றூணேடு தன்னைச் சார்த்தியபடியால் பெற்றபயன் யாதெனில், அவள் பொன் மலையிற்

சாய்ந்த மின்னல்போல், அழகின்மீது அழகுற்று நின்றாள். பொற்றூணின் கதிர் மாலைகள் காந்தரியின்மீது தாக்க, அவள் மின்னலின் சாயலை ஒத்துக் காண்போர் கண்கள் கூசும்படியும் உற்று நோக்கும்படியும் நின்றாள். இவ்வாறு தன் அழகை மிகைப்படுத்திக் காட்டவே, அவள் பொற்றூணைப் பொருந்தி நின்றாள் என்று அறிக. சினிமாக் கலா ரசிகர்களும் வியக்குமாறு முனிவர் காந்தரியைப் படம் பிடித்துக் காட்டும் நிலை அம்மம்ம, அதிவியப்பிற்கு இடனாய் அமைந்துள்ளது.

6. எசிசியமரியாள் எனும் பெயரிய பெண்மணி ஒருத்தி, தன் முன்னைய கேடுதரும் வாழ்க்கையைத் துறந்து, கிளர் தவம் பூண்டு, நோற்பாளாயினள். அவளது முன்பின் நிலைகளைக் கவி விரித்துரைப்பாராகி, அவள்,

"காமமே பறவைத் தேர்மேல் கசடெனும் பாலை சேர்ந்தாள்
வீமமே பறவைத் தேர்மேல் விளைதவக் குறிஞ்சி ஞான
வாமமே பறவைத் தேர்மேல் வளர்அற முல்லை சேர்ந்தென்
ஞமமே பறவைத் தேர்மேல் நயப்பவான் நாட்டைச்
சேர்வாள்" 30/79

என்றார். காமமெனும் தேரைக் கொண்டு பாலை நிலமாகிய பாவசீவியத்தில் இருந்தாள் என்றார். ஆறலைக் கள்வரும், மறஞ் செய்து மன்னனது தண்டத்துக்கு அஞ்சினோரும் வாழ்கின்ற பாலை நிலத்தோடு பாவத்தை ஒன்றித்து உரைத்தார், பாலைநிலம், பாவத்திற்கே இருப்பிடமும் பாதுகாப்பு அளிப்பது மானதாகலின். தேவபயமாகிய பறவைத்தேர் கொண்டு தவக்குறிஞ்சி சேர்ந்தாள் என்றார், தவஞ் செய்வதற்கு ஏற்ற நிலம் குறிஞ்சியாகலின், தவிர, தவம் தவறுப் பயன் தர வேண்டுமாயின்,தெய்வ பயம் மிகவும் வேண்டற்பால தென்றும் உணர்த்தினர். ஞானமாகிய அழகிய தேர் மீதேறி வளர் அற முல்லை சேர்ந்தாள் என்றார். இல்லின்கண் இருந்து ஏழைகட்கு இரங்கலும் விருந் தெதிர் கோடலும் ஆகிய பற்பல அறங்கள் வளர்ப்பது முல்லைத் திணைக்கு உரியதா

கலின் 'வளர்அற முல்லை' என்றார். தவிர. முல்லைநில ஆயரே பொன்னைப் பற்றிவரும் குற்றங்களைக் கொள்ளாத பொற் குணத்தினர் என்பதை ஆசிரியர் 11-ம் படலம் 3-ம் செய்யுளில் குறித்தபடி, பொன்னையும் பொருளையும், அறத்தின் பொருட்டு ஆதுலர்க்கு அளிக்கும் ஆயர்கள் மலிந்த முல்லை நிலம் 'வளர் அற முல்லை' என்னும் அடைமொழி பெறத் தகுதி யுடையதாயிற்று. அறம் வளர்த்தற்கு, கடவுளைப் பற்றிய ஞானம் இன்றியமையாத தொன்று என்பதும், பெற்றாம். ஈற்றில் அவள் என் நாமத்தேர் மீதேறி வான்கதி யாகிய மருத நிலத்தைச் சேர்வாள் என்று முடித்தார். மருத நிலமே மிகச் செல்வமும் அழகும் சிறப்பும் பொருந்திய தாகலின் மோட்சத்தோடு அதனை ஒப்பிட்டுக் கூறினார். அம் மோட்ச கதியைப் பெறுதற்கு யேசு எனும் நாமத்தில் விசுவாசமும், அதற்கொத்த நற்கிரிகைகளும் ஒருவனுக்கிருக்க வேண்டும் என்பதும் பெறப்படும். பாதி நீரும் பாதி நிலமுமாய், கால வாய்ப்பட்டு அடிக்கடி மாறும் தன்மை நோக்கி நெய்தல் நிலத்தைக் கூறிற்றில ரென்க.

7. முனிவர் இளமையின் நிலையாமையை எடுத்து ஓதுமாறு:

"மீய்முகத் துடையிற் றோன்றும் விசும்புசூழ் வரையிற் றூங்கித்
தூய்முகத் தலைகள் ஒட்டித் துள்ளிவீழ் அருவி போல
வேய்முகத் தினிமை காட்டி விரைவிலோ டிளமை நம்மேல்
காய்முகத் ததிர்கால் வீசக் காய்முதல் வீழ மென்றான்" 28/57

இஃது சூசைநாதர் கூற்றுக வாமன் என்பானுக்குச் சொல்லிய உபதேச மொழிகள் அடங்கிய செய்யுள்.

மீய்முகம்-ஆகாயமண்டலம்; தூய்முகம்-தூய்மையாகியமுகம்; வேய்முகம்-அழகியமுகம்; காய்முகம்-கோபத்தன்மை. மலைவீழ்

அருவி போன்றது இளமை என்றார். அவ்வருவியின் முந்தைய உருவங்கள் எவை? ஆதியில் அது மீய் முகத்தின் கண் மேக வடிவில் அழகிய ஆடைபோற் பரவிக் கிடந்தது; பின்னர் அம்மேகம் ஆகாயத்தை அளாவிய மலையின் மீது முடிபோற் படிந்து நின்றது; பின்னர் தூய்மையான அலைகளை யுடைய நீராக மாறிற்று; கடைசியாகத் துள்ளிவீழ் அருவி யாயிற்று என்றார். இளமையின் பல்வேறு அழகுகளும், திடீரென அவைகள் அடையும் மாறுதல்களும், ஈற்றில் கழிந்து கழன்று ஓடுவதும் இச் செய்யுளிற் செவ்வனே காட்டப்பெற்றுள்ளன. ஆகாயத்தின் மீது மாசற்ற ஆடைபோலத் திகழும் மேகம் குழந்தைப்பருவத்தைக் குறிக்கும் எனலாம். அம்மேகம் காற்றினால் உந்தப்பெற்று மலைச் சிகரத்தை யடைந்து, கார்முகிலாகி அம்மலைக்கு முடிபோல் அமைந்தது; இஃது இளமைப் பருவத்தின் மற்றொரு நிலையைச் சிறிது மாசு படிந்தது போற் காட்டினும் அதன் மாட்டும் ஓர் புதிய அழகு திகழக் காண்கிறோம். அதன் மேல் அம் மேகம் மழையாக வீழ்வதும், நீரலை புரள நிற்பதும், இளமையின் பிறிதொரு படமாம். நீரலை புரளாநின்ற அருவி இடம் விட்டுப் பெயர்ந்து, துள்ளலோசையுடன் துள்ளி அகல்கின்றது; அந்தோ! நில்லா அழகையுடைய இளமைப் பருவம், மலைக்கு ஆரம்போல் அழகுடன் விளங்கிய அருவி யொக்க வேய்முகத்து இனிமை காட்டி விரைவில் ஓடிவிடுகிறது என்றார். ஒருகால் ஆகாயத்தின்கண் ஆடைபோலவும், ஒருகால் மலையிடத்து முடிபோலவும், ஒருகால் தூயதிரை நீராய் ஆரம் போலவும் தோன்றுவதாகிய மேகம்போல விரைவிற் கழிதற் பாலது இளமைப் பருவம் என்க. நீர் திரண்டதும், எவரும் நிறுத்தக்கூடாத நிலையில் அருவி தானே நீங்கற் பாலது என்பதைத் 'துள்ளி' என்னும் மொழியால் பெற வைத்த நயம் பெரிதும் இன்பம் உறுத்துவது. அவ்வாறே, இளமையும் காலன்வரும்போது எவரும் நிறுத்தக்கூடாத நிலையிற்றானே நீங்கற்பாலது என்க. காலனும் காற்றும் ஒன்றே. 'காற்று வீசும்பொழுது, "கனியிருக்க நற்காய் வீழ்தலும் உண்டு" என்னும் நாலடியார் கூற்றிற்கு இணங்க,' காலன் கேர்பத்தோடு வராநிற்புழி அறுபது வயதினர் சாகா

விருப்ப ஆறு வயதினர் சாதலும் உண்டன்றே! இவ்வுண்மையை ஈற்றடியிற் புணர்த்தி, இளமை நிலையாமையை மேலும் வலியுறுத்தினர்

## 17. தோத்திரப் பாடல்கள்:—

தேம்பாவணி ஆசிரியர் இசைப்பயிற்சி மிக்குடையர் என்பதற்கு அக்காவியத்தில் பல சான்றுகள் உள' சிலப்பதிகாரத்தில் வரும் வரிப் பாடல்கள் போன்றவைகளை ஆசிரியர், பாட்டொன்று கூறிப் பாடுகின்றனர். முற்காலத்தில் அடுக்குச் சொற்கள் இசைப்பகுதியில் நடுவினும் கடையிலும் வருவதுண்டு. ஆனால் இக்காலததிலோ பல்லவி அனுபல்லவியாக முதலிற் பாடப்படுவன. அடுக்குச் சொற்கள் இடைமடக்காகவும் நிற்பதுண்டு. வரிப் பாடல்கள் பல் வகைப்படும்.

யேசுவாகிய திருக்குழந்தையோடு சூசையும் மரியும் தேவாலயத்தின்கண் நேர்ச்சையின் பொருட்டு எழுந்தருளிய காலையில், சிமையோன் என்னும் பக்தன் பாருடம்புக்கு உயிராய் வந்த பரமனைக் கரத்திலேந்தி அன்பினுற் பொங்கி, ஈருடம்பும் ஒன்றும்படி குழந்தையை மார்போடு இறுகத் தழுவி, வான்வீட்டை அடைந்தவன்போல் ஆனந்தம் மேவிட்டு, ஆர்வத்தோடு பாடுகின்றான். 12/80-82

பாற்கடலென் னுள்ளப் பதும மலரரும்ப
நூற்கடலே யீங்குதித்தாய் நும்மலர்க்கண் முத்தரும்ப
நும்மலர்க்கண் முத்தரும்ப நோய்செய்
வினைசெய்தோம்
எம்மலர்க்கண் முத்தரும்ப இன்று வினைதீர்த்தாய்

வினைதீர்ப்ப வெய்தி வினைகொண்டாய் பாவப்
புனைதீர்ப்ப வீங்குமனுப் பூட்சிச் சிறைகொண்டாய்
பூட்சிச் சிறைகொண்ட புல்லென் னுயிர்போயுன்
காட்சிச் சிறைகொண்டு கண்டேன் கதியிலேயே

கண்டேன்கதி நிலையே கண்டுயிரென் பூண்பலினி
உண்டே னுயிராயன் புன்னடியைச் சூடினேன்
உன்னடியைச் சூடி யுனையணுகான் தன்வினையே
தன்னடியைச் சூழ்ந்துதைப்பச் சுட்டெரிவீழ்ந்
தாழ்வானே

இச்செய்யுட்கள் மூன்றும் வெண்பாவிற்கு ஏற்ற செப்பலோசையால் வருவன அறிக. இசையோடு பாடத்தக்கனவாய் அமைந்த அடுக்குச் சொற்களோடும் இவை கூடியன. இது தெய்வம் பரவிய வரிப்பாட்டன்றி வேறன்று, இத னோடு கீழ்வரும்

"கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்
திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
அங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே"

என்னும் சிலப்பதிகாரத்துக் கானல் வரிப்பாட்டை ஒப்பிட்டு நோக்குக.

"தனைவேண்டிப் போயொளித்த தன்மை பிறர்கொள்
வினைவேண்டித் தானுள் மெலிந்தழுவான் யாரே
வினைவேண்டித் தானுண் மெலிந்தழுதே இங்கண்
எனைவேண்டி மைந்தனென எய்தியநீ யன்றே" 14/88

இவ்வாறே மூன்று செய்யுட்கள் செப்பலோசை பிழையாமல் வந்தன. 14/88–90 இதனை

புள்ளிபன்மான் தோழி போனவழி யெல்லாம்
தெள்ளுநீரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடீங்
குள்ளாரோ டுள்ளா யுணராமற் றென்செய்கோ

என்னும் சிலப்பதிகாரக் கானல்வரிப் பாட்டோடு இயைத்துப் பார்க்க,

இஃது காபிரியேல் என்னும் வானவன் இளவலாகிய யேசு பாலகனின் முற்கால மாட்சியை சலப்பிரளய வரலாற்றைக் கொண்டு வகுத்துரைத்தபோழ்து, மரியென்பவள் மனமகிழ்வுடன் மைந்தனை வியந்து பாடிய பாட்டு. இது மூன்று அடுக்கி முடுகியவாய் வந்த தாழிசைக் கொச்சக ஒருபோகு என்பர் இலக்கண அறிஞர்.

மருடரு மறுவற மழைதரு மடிவற
வருடரு குருதியி னடைமழை தருகுவை
யருடரு குருதியி னடைமழை தருகுநின்
சுருடரு மதுமல ரிணையடி தொழுதும். 14/123

இதைச் சந்தி நீக்கி எழுதின்

"மருள்தரும் மறுஅற மழைதரும் மடிவுஅற
அருள்தரும் குருதியின் அடைமழை தருகுவை
அருள்தரும் குருதியின் அடைமழை தருகும்நின்
சுருள்தரும் மதுமலர் இணையடி தொழுதும்"

என நிற்றற்பாலது. இப்பொழுது பொருள் வெளிப்படை. முதல் அடியில் வந்த 'மழை' சலப்பிரளய மழையைச் சுட்டியது. இதுபோன்றதோர் செய்யுளைச் சிலப்பதிகார நூலின்கண் வேட்டு வரியுணின்று காட்டுதும். அங்கேயும் இது மூன்றடுக்கியே வந்தது. வரிப்பாடலாகக் கருதப்படலால் இதுவும் இசைப் பகுதியின் பாற் பட்ட தென்றே இயம்பக் கிடந்தது.

"சுடரொடு திரிதரு முனிவரு மமரரு
மிடர்கெட வருளுநி னிணையடி தொழுதேம்
அடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறறரு விலையே"

என்றார் இளங்கோவடிகளும்.

## 18. முடிவுரை.

தேம்பாவணியாம் காவியக் கடலுள் புகுந்து சில முத்துக்களை மட்டும் யாம் இதுகாறும் எடுத்துக் காட்டினேம். பரந்த கடலுட் குளிப்பவன் கைக்கெட்டிய வரையில் உள்ள முத்துக்களைத்தான் வாரியெடுக்க முடியும். அதுபோலவே யாமும் எம் புத்திக் கெட்டியவரையில் சில முத்துக்களைக் கொணர்ந்து தந்தோம்.

கம்பரைக் கல்வியிற் பெரியன் என்று கூறுவதற்குக் காரணங்களாக உள்ளனவற்றுள் ஒன்று அவரது சொல்லின் செல்வமே. வார்த்தையாடற்கண்ணும் தர்க்கத்தின்கண்ணும் கம்பரது சதுரப்பாடுகளை அவரது காவியத்திற் காண்பார் அவரைக் கல்வியிற் பெரியன் என வாழ்த்தா நிற்பர். அத்தகைய பெருமை வீரமா முனிவர்க்கும் உரித்தே. எரோதன் மந்திராலோசனை, குணுங்குகளின் சதியாலோசனை, வாமனது வார்த்தையாடல் முதலிய பாகங்களில் வீரமாமுனிவரது சொல்லின் செல்வத்தைக் கண்டு பெரிதும் இன்புறுவேம். தவிர நடுத்தீர்வை, நரக வருணனை முதலியவற்றைக் கூறும் பகுதிகள், வீரமாமுனிவர் தாந்தே எனும் இத்தாலிய புலவரோடும் ஒத்த பெருமைக்கு உரியராவர் எனச் சொல்லும். இத்தகைய பெருமை வாய்ந்த காவியம் பொது மக்களால் இன்னமும் தக்கவாறு பயிலப்பெற்றுக் கையாளப் படவில்லை என்பது மிகவும் வருந்தற்பாலது.

ஆதலின் தேம்பாவணியாம் காவியத்தைத் துருவித் துருவி, ஆங்குத் தென்படும் அரிய மணிகளை மேலும் மேலும் எடுத்துத் தமிழன்னையைப் புனைவதோடு அக்காவியத்தைப் பயிலுமாறு தமிழரனைவரையும் ஊக்கி எழுப்புவது கற்றோரெல்லோர் மீதும் உள்ள பெருங் கடனாகும்.

## 19. அரும்பதவுரை

| பக்கம் | பதம்—உரை |
|---|---|
| 4 | கூம்பா-குவியாத |
| ,, | கரு-பிறப்பு |
| ,, | பெற்றியர்-தன்மையர் |
| ,, | பண்-திருத்தம், அழகு |
| 5 | வீறு-பெருமை |
| ,, | பிருண்டு-பிறவிடம் |
| ,, | மரு-வாசனை |
| ,, | துய்த்தல்-அநுபவித்தல் |
| 6 | சதுரம்-சாமர்த்தியம் |
| ,, | எடுத்துக்காட்டு-உதாரணம் |
| ,, | தூமம்-வாசனைப் புகை |
| ,, | தாமம்-மாலை, ஒளி |
| 7 | துகில்-ஆடை |
| ,, | சேய்-குழந்தை |
| ,, | உய்க்கும்-செலுத்தும் |
| 9 | அடுக்குச் சொல்-பல்லவி |
| ,, | பாயிரம்-முகவுரை |
| ,, | மரபு-வழக்கு |
| 10 | ஐந்திணை-குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை |
| ,, | வேரி-வாசனை |
| 11 | ஆடாநிலை-அசையாநிலை |
| ,, | கவர் பொருள்-கிளைபடு பொருள் |
| ,, | நாம்பா-மெலியாத |
| 12 | ஆறறுநூறு-3600 |

| பக்கம் | பதம்—உரை |
|---|---|
| 13 | ை திரம்-நாடு |
| ,, | பூங்கா-பூஞ்சோலை, அழகிய சோலை |
| 14 | குணுங்கு-சோகு, பிசாசம் |
| ,, | கெழுமிய-பொருந்திய |
| 15 | உபய லோகம்-இருவுலகம் இவ்வுலகம் மறுவுலகம் |
| ,, | இறும்பூது-பேராச்சரியம் |
| ,, | உள்ளிட்டார்-முதலியோர் |
| ,, | பா-செய்யுள் |
| ,, | அடவி-காடு, கானம் |
| 16 | அழல்-நெருப்பு |
| ,, | கோட்டிய-கேடான |
| ,, | மனத்தின்-மனம்போல் |
| ,, | இருது-பருவம் |
| ,, | நயனம்-கண் |
| ,, | பிரேமை-கவர்ச்சி |
| 17 | ஈதனைய-இதைப்போன்ற |
| ,, | வில்-ஒளி |
| 19 | சேணுலகு-மேலுலகு |
| 20 | கஞ்சனம்-கண்ணாடி |
| ,, | ஓகை-களிப்பு |
| 21 | இருபொழுது-இரவுபகல் |
| ,, | ஆசிலா-குற்றமிலா |
| ,, | வியத்தொறும்-வியக்குந்தொறும் |

22 பண்-வீணை
,, கவின்-அழகு
,, குயிற்றல்-பதித்தல்
23 என்பு-எலும்பு
,, தளை-விலங்கு
,, ஆர்வலர்-அன்பினர்
24 மருமம்-இருதயஸ்தானம்
,, புழை-துவாரம்
,, உந்த-தள்ள
,, நாகம்-பாம்பு, மலை
27 வழி-மூலம், காரணம், வகை
,, இறையும்-கணநேரமும்
,, செயிர்-குற்றம்
,, பிச்சம்-சாமரை
28 புறக்காழ்-புறவயிரம்
,, உளி-இடம்
,, படலைக் கதை-வீண் கதை
29 அநாயாசம்-ஆயாசமின்மை
30 அந்தம்-அழகு
,, ஒண்(மை)-பிரகாசம்
,, அலங்கல்-மாலை
,, தேறல்-தேன்
,, வண்டலம்பலங்கல்-வண்டு அலம்பு அலங்கல்
,, பங்கி-தலைமயிர்
,, கொண்டல்-மேகம்
,, விண்டலம்-விண்தலம்
31 நூறி-உடைத்து, நொறுக்கி
,, தாரை-எக்காளம்
,, ஏறு-இடியேறு
,, எல்லை-அளவு
,, வில்லின் மாரி-வில்தரு [சரமாரி
,, எல்-ஒளி
32 அடத்தி-அடர்த்தி
,, இக்குடைத்த-கரும்பைப் பழித்த
,, குடத்தியர்-இடைச்சியர்
,, பற்றல்-அன்பு
,, தோன்றல்-குழந்தை யேசு
,, துணர்-பூங்கொத்து
,, உடுக்கள்-விண்மீன்கள்
,, துற்றல்-நெருங்கல்
,, மாகம்-வானுலகம்
,, ஆகம்-தேகம்
33 மருள்-மயக்கம்
,, கடியொலி-மிக்க ஒலி
,, கரி, பரி-யானை, குதிரை
,, மஞ்சு-மேகம்
,, எஞ்சுக-மிகுமாறு
,, ஞாஞ்சில்-படைக்கருவி
34 தாவீதன்-தாவீது
,, கதம்—கோபம்
,, பெருமிதம்—வீரம்
,, பாவம்-தன்மை
,, முரண்பாடு-வித்தியாசம்
35 அருது-இடைவிடாது
,, உருவுணர்வு-பொருந்தாத அறிவு
36 கலுழ்தல்-அரற்றல், அழுதல்
,, நரு-தேன்
39 அங்காந்தென-திறத்தாற் [போல
,, சிக்குருவை-நெல்வகை
,, அச்சா-ஆச்சாவிதை

,, கோகு-கழுதை
40 அனுவதித்தல்-மீண்டு முரைத்தல்
,, காரி-குற்றம், கீழ்மக்களின் தன்மை
,, நாரி-பெண்கள்
,, பூரி-மிகுதி
,, அரம்பை-வாழை
,, வியன்-பெருமை
,, முனி-கோபம், முனிவர்
43 மேதி-எருமை
44 வாகை-வெற்றி
,, செல்-மேகம், சிலை, வில்
,, இரிதல்-ஓடுதல்
45 அசனி-இடி
,, மின்-மின்னல்
48 விழுத்தகு-சிறப்புக்குரிய
,, கலதத்தல்-சொல்லல்
,, நசை-விருப்பம்
,, செகுத்திலால்-ஒழிக்காவிடில்
,, வெளிறு-வெறுமை, வீண்
,, மழித்தல்-மயிர் சிரைத்தல்
49 பனிச்சொல்-கனிவுமொழி
50 கலை-அறிவு
,, உலை-நெருப்பு உலை
,, வழுது-வெண்ணெய்
,, நேமி-சக்கரம்
51 பல்புரைவித்தி-பல மாசுகளை விதைத்து
,, மாசை-பொன்
,, பூதி-லாபம், பலன்
,, செறு-வயல்
52 நந்தா-கெடாத
53 எனைத்து-எவ்வளவு
,, துடர்விசித்து-சங்கிலிகட்டி
55 இழுக்கு-குற்றம்
,, வீமக்கருள்-பயங்கர இருள்
,, ஏமம்-க்ஷேமம், இன்பம்
,, வாமம்-அழகு, ஒளி
56 அடுதல்-வருத்தல்
,, கோல்-கோலம், அழகு
,, வாளி-அம்பு
,, செருநர்-பகைவர்
57 அருவாயின-ரூபமில்லாத
,, விண்வீழ் கொள்ளி-விண்மீன்
58 சேடு-இளமை, அழகு
,, உள்தடம்-உள்ளமாகிய தடாகம்
,, நச்சிய-விரும்பிய
,, அச்சு சவி-அழியா அழகு, ஒளி
,, ஆடல் இலாகி-ஆடாமையால்
59 விஞ்சு ஏடு-மிக்க இதழ்
,, வீ-மலர்
,, ஆவலித்து-ஆசைப்பட்டு, வருந்தி
,, காவி-நீலோற்பல மலர்
60 பானு-சூரியன்
,, மூரல்-பற்கள், சிரிப்பு
,, பொச்சை-மலை
,, ஆர்கலி-சமுத்திரம்
,, பாசறை-துன்பம்
61 ஏர்-அழகு
,, மை-மேகம்
,, மருளி-கலந்து
62 சின்னம்-அடையாளம்
63 நூக்கிலாது-விலகல் இல்லாது

63 வயம்-பலம்
64 இலஜ-இல்லாத அழகு
,, வயா-நோய்
,, இலயை-அழிவுகாலம்
,, ஆங்கு-போல
67 வளி-காற்று
,, வினைக்குறை-வினையெச்சம்
,, தகவோர்-மேன்மக்கள்
69 வெருவி-அஞ்சி
70 எயில்-ஊர்
,, விரை-வாசனை
,, சுரை-புன்னை

71 காளவனம்-சுடுகாடு
72 சீறடி-சிறுமை+அடி
73 வில்அலம்-போதிய ஒளி
75 ஆதுலர்-தரித்திரர்
77 சான்று-எடுத்துக்காட்டு
,, பதுமம்-தாமரை
,, பூட்சி-உடல்
78 திமில்-தோணி
79 மிடறு-கழுத்து
80 நடுத்தீர்வை-கடைசிபொது
நியாயத்தீர்வை
,, தாந்தே-இத்தாலிய கவிஞன்

அநுபந்தம்

## 20 தேம்பாவணிக்குப் பொழிப்புரை எழுதியவர் சங். வீரமாமுனி சுவாமிகளா?

இத்தலைப்பின் கீழ் முன்பொருகால் "சர்வ வியாபி" பத்திரிகையின்கண். தூத்துக்குடி பண்டித மஸ்கரன்ஹாஸ் அவர்கள் சிறந்ததோர் கட்டுரை எழுதியுள்ளார். அக் கட்டுரையில் பண்டிதரவர்கள் பல காரணங்களை ஆதாரங் களோடு காட்டித் தேம்பாவணிக்குப் பொழிப்புரை எழுதிய வர் சங். வீரமாமுனி சுவாமியாரல்லர் என்றும், உரை எழுதிய வர் மாணுக்கருள் ஒருவரே என்றும் நிறுவியுள்ளார். எனினும், யாமும் அப்பொருள் பற்றி ஆராய்ந்து எழுதியபின், பண்டித மஸ்கரனேசு அவர்கள் எழுதிய கட்டுரையை வாசிக்க, அதில் பின் கூறப்படும் சிறப்பான காரணங்கள் மிகவும் ஊன்றிக் காணத்தக்கன என்று உணர்ந்தோம். ஏனைய காரணங்கள் இரண்டு கட்டுரைகட்கும் பொதுவான குறிப்புகளாகவே அமைந்துள்ளன எனினும் இழுக்கன்று. எமது கட்டுரையில் காணகில்லாத பண்டிதரவர்கள் எழுதிய கட்டுரையில் காணலாவன பின்வருமாறு:—

1. எத்தனையோ காவியங்களையும் பிரபந்தங்களையும் எழுதிப் போந்த மகாகவி வீரமாமுனிவரவர்கள் தாமாகவே பொழிப்புரையும் பகர்வாரென்பது வியப்புக்கு இடனாய் அமைந்துள்ளது என்பது. 2. மாணவர்களும் இதர நண்பினர் களும் விரும்பியவாறும், தேம்பாவணியாம் காவியம் பற்பலர்க் கும் பயன்படுமாறும் அடிகள் தாமே தம் காவியத்திற்கோர் உள்ளுரை யருளினர் என்பார் ஒரு சாரரது கூற்றினை வெட்டிப் பேசியதொன்று. 3. தேம்பாவணி பாயிரச் செய்யுள் ஏழின் உரைக்கு மேற்குறிப்பாக 'மரி யென்பவள் இக் கதை சொன்னவாறுரைப்பத் தொடங்கினர்' என்றுரராகலின் உரையாசிரியர் வேறு என்பது பிறிதொன்று. 4. புரோகிதப் படலம் 73-ம் செய்யுளுக்கு மேல் உரைக் குறிப்பாக "தொகை

யிற் சொன்ன அரசரை வகுப்பறிந்து இங்கே காட்டத் துடங்கினர்" என்று உரையாசிரியர் தம்மை வேருக்கி மொழிவதொன்று.

இவ்வாறு பண்டிதரவர்கள் பலவாறு ஆய்ந்து, பல்வேறு ஆதாரங்கள் வாயிலாகப் பொழிப்புரை வீரமாமுனிவரது அன்று என நாட்டியும், இன்னமும் புலவர்கள் பலருங் கூட, முன்னைய உணர்வின் கண்ணேயே முயங்கி மயங்கி யிருக்கின்றனர்.

ஆதலின் யாமும் அதனை ஒரு சிறிது ஆராயத் தொடங்கியமையின் பயனாக, பண்டித மஸ்கரன்ஹாஸ் இட்ட தலைப்பையே தலைப்பாக் கொண்டு, பின்னால் எமது ஆராய்ச்சியைக் குறித்துள்ளோம்.

தேம்பாவணியைப் பிரசித்தப்படுத்தியவரால் எழுதப் பெற்ற முகவுரையின்கண் "வீரமாமுனிவர் தந்த உரை வழி யாக" என்னும் சொற்றொடர்கள் காணப்படுகின்றன. இதன் காரணமாகத் தேம்பாவணியின் பொழிப்புரை வீரமாமுனிவ ராலேயே வரையப்பெற்றதெனப் பலர் மயங்கிவிட்டனர். அம் முகவுரை கூறுவதும் அதன் துணைகொண்டு பிறர் அவ்வாறு கூறுவதும் தவறேயாம் என்பதை வலியுறுத்தும் சான்றுகள் பல சாற்றற்பாலன.

1. தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும் எய்த வுரைக்கும் தற்சிறப்புப் பாயிர மொன்றை வீரமாமுனிவரே தேம்பாவணிக்கு அளித்துள்ளார். அப்பாயிரம் பதின் மூன்று செய்யுட்களையுடையது. அவற்றுள் ஒன்றிலேனும் அடிகள் தமது பொழிப்புரை பற்றி ஒரு மொழியேனும் உரைத்திலர். ஆனல் உரைநடையின்றி, பாவாலேயே இந்நூல் எழுந்தது என்பதை ஆரும் பாயிரச் செய்யுளில் "உலகொருங்காள்வாள் சொன்ன அமிழ்தை யான் புற்பாவொடு கக்கக் கேட்பார்" என வருந் தொடர்கள் அங்கை நெல்லிக்கனி போல் தெற்றெனத் தெரிவிக்கின்றன. வேரியங்கொடியோன் காதையை வீரமாமுனிவர் தேம்பா

வணி யெனப் பிணித்தல் செய்தனரே யல்லாது தேம்பாவணி யுரையெனப் பிணித்தல் செய்திலர். அணி என்பது மாலை பாக்களின் வரிசையே மாலையாவதன்றி உரைநடை கலந்தது தொடர்நிலைச் செய்யுள் மாலையாகாதென அறிக.

2. பண்டு காப்பியக் கவிகளுள் எவரேனும் தாம் பாடிய காப்பியத்திற்கு உரையுங் கூறிப் போந்தார் என்று நாம் இது காறும் கேள்விப்பட்டதில்லை. செய்யுள் நடையே சிறந்து மிளிர்ந்த அக்காலத்தில், கற்றுச் சொல்லிகளும் உரையா சிரியர்களும் மலிந்து விளங்கிய அக்காலத்தில், அக் கவிகள் உரையுங் கூட்டி இயற்றுவதை அவசியம் என்று கண்டிற்றிலர். தவிர, உரை எழுதுவது காவியத்தைச் சிறுமைப்படுத்தும் செயல்களுள் ஒன்றாகக் கருதியபடியால்தான் பிற ஆசிரி யர்கள் உரை யெழுதி அன்னவரை மேலும் பெருமைப்படுத் தினர் போலும். ஆனல் பரிமேலழகர் உரையைப் போலத் தேம்பாவணியுரை அந்நிலையில ஒப்புடையதுமன்று. எனவே, ஆக்கியோனே அருளிய உரையுமன்று என்பது மேலோட்ட மாக ஒரு முறை பயில்வோருக்கும் உணர்வில் படுவது ஒரு தலை. தவிர, உரை யெழுதிய மாணக்கர், தேம்பாவணியின் அழகுக்குத் தேம்பாவணியே சான்ருக அமைந்திருப்ப, அவர் தம் உரை விசேடத்தால் அதை ஒரு படி உயர்த் திக் காட்ட விரும்பாது, இன்றியமையாது வேண்டிய உரை யையே வேண்டிய அளவில் உரைத்துப் போந்தார் என்க.

3. தேம்பாவணியைப் பிரசித்தப்படுத்தியவர் முதல் காண்டம் 329ம் பக்கத்தின் அடியில் 10/97 விருத்தத்தைப் பற்றி, "இவ்விருத்தத்தை வீரமாமுனிவர் தமது கையெழுத் துப் பிரதியிலேமாற்றி உரைமாற்ருது விடுத்தார்" என்ருர். கவிஞர், பொழிப்புரையாளராயும் இருந்தால் இப்பிழை ஏற் படுமா? மேலும், இதனல், பிரசித்தப்படுத்தியவர் கையில் வைத்திருந்த பிரதி முனிவருடைய கையெழுத்துப் பிரதியாய் இருந்திருக்குமாவென்ற சந்தேகமும் ஏற்படுகிறதல்லவா?

4. புலமை வல்லார் பொருளுறு கவிகளைப் புகலுந் தோறும் கற்றுச் சொல்லிகள் உடனே அதை எழுதுவதுண்டு. கவிகள் தாமாகவே எழுதுவதுமுண்டு. அதுவேமூலம், மூலப் பிரதி எனப்படும். அத்தகைய மூலப் பிரதியொன்று தேம் பாவணிக்கும் இருத்தல் வேண்டும். அஃது உருவெடுத்து உலவிய பின்னரே, மாணக்கனே உரையாசிரியனே அதற்கு உரை எழுதல்மரபு. தேம்பாவணியின் மூலப் பிரதி கிடைக் காத நிலையில் உரையோடுகூடிய பிரதியையே மூலப் பிரதி யாக்க கருதியமையின், தேம்பாவணியின் ஆசிரியரே உரை யும் எழுதிப் போந்தார் என ஒரு சிலர் மயங்கினர் போலும்.

5. சீவக சிந்தாமணி, மணிமேகலை முதலிய சில காப்பி யங்களில் கதை ஆரம்பிக்குமுன் பதிகம் என்பதொன்று காணப்படும். ஆனல் தேம்பாவணியிலே பாவுரைப் பதிகம் என்ருெரு ஆசிரியப் பாவைப் பார்க்கின்ருேம். யாம் முற் கூறிய நூல்களின் பதிகங்கள் பெரும்பாலும் நூற்பொருள டக்கங் கூறுவன. அன்றேல், நூற்கதையை நுவல்வன. தேம் பாவணியிலோ பாவுரைப் பதிகம், உரை செய்தோனல் வரை யப் பெற்றுப் பல செய்திகளை வெளியிடுகின்றது. பாவுரைப் பதிகத்தின் முதற்கண் உரையாசிரியர் தம்உரை விசேடத் தைக் கூறுங்காலை, "கவிஞர் தம்கவிகளை இயற்ரு நிற்புழி ஒரு பெயரால் பல பொருளும் ஒரு பொருளாற் பல்பயனும் விளையும்படி யாப்பது இயல்பெனினும், விரியும் இது வென அஞ்சி, இன்றியமையாது வேண்டும் ஒரு பொரு ளால் விளம்புதும் உரையே" என்ருர். பரிமேலழகரோ ஏனை யரோ உரை கண்டாங்கு இவ்வாசிரியர் உரை காணமைக்கு இதுவே காரணம் என்க.

இரண்டாவது இப்பதிகத்தால் புலனவதென்னெனில், உரை செய்தோன் கன்னிமரியிடத்தும் கவிஞரிடத்தும் மிக்க அபிலாசையும் அபிமானமும் வாய்ந்தவர் என்பது. "பேரருட் கடலாய்ப் பெரும்புகழ் மரியென்பாள், வான்வாழ் மொழி யொடு மலர் உமிழ் மதுவென, தான் வாழ் உவப்பொடு தந்த திருக்கதை" என்றமையும், "மறை மொழிவாயினன் மலி

தவத்திறைவன், நிறை மொழிக் குரவன், நிகரில கேள்வியன் வியன் தமிழாக வுரைத்தவன்'' என்றமையும், முற்கூறிய கூற்றுக்களை வலியுறுத்துகின்றன. எனவே, உரையாசிரியன் வீரமாமுனிவர்பால் அன்புடையனாய், இக்காவியத்தின் முப் பயனையும் பூவினர் யாவரும் துய்க்குமாறு 'அரும் பயன்' உணர்ந்து உரை அறைகுது நானே என்று அறைந்தனன். இந்துணைத் தெளிவாக உரையாசியன் உரைப் பதிகம் சாற்றி யும் தேம்பாவணியின் பொழிப்புரை வீரமாமுனிவராலேயே எழுதப்பெற்றது எனச் சாற்றுதல் எட்டுணையும் பொருந் தாது என்க.

6. தேம்பாவணியெனுந் திருக்காவியம் கண்ட ஆண்டு 1726 கி. பி. என்பர் பெரியோர். மூன்ருங்காண்டத்து முடி வின்கண் சூசைதன் சரிதையாகிய தேம்பாவணி நன்ருக முடிந்தது என்ற சொற்ருெடர்கள் காணப்படுகின்றன. அதன் மேல், உரையாசிரியர் புறவுரை காட்டுமுன் சில வாக்கியங் கள் எழுதியுள்ளார். அதில் "1729-ம் ஆண்டில் கன்னி மரியாள் திருமலர்ப் பாதத்து அணியெனத் தேம்பாவணி யுரை முடிந்தது. ஆகையால் புறவுரை காட்டுதும்'' என்ற வாசகம் வந்துளது. இஃது உரையாசிரியன் வேறு என்றும், ஆக்கியோன் அருளிய காவியம் கற்றுத் தெளிந்த அவரது மாணுக்கன் மூவாண்டுகட்குப் பின்னரே உரை யெழுதி முடித்தனன் என்றும், உரையில்லாத மூலப்பிரதி யொன்று ளது என்றும் சுட்டுவதாகும்.

7. மாணுக்கன் புகழ்ந்துரைத்த புறவுரையொன்று ஆசிரியப் பாவால் இயன்றது தேம்பாவணியின் ஈற்றில் சேர்ந்துளது. இதை எழுதியவரும் பாவுரைப் பதிகம் பாடிய வரும் இந்நூற்கு உரையருளியவரும் ஒருவரே என்பது பொருந்தும். இவ்விரு ஆசிரியப் பாக்களின் மொழி நடையும் ஆக்கப்பாடும் வார்த்தைப்பாடும் ஒன்று போலவே செல்கின் றன. இப்புறவுரையும் உரை யெழுதியவராலேயே கூறப் பெற்றது என்பது, " நான் நல்லமிர்த மேந்திய நலிந்த மட் குலமெனச், சொல்லமிர்தேந்திய துகளுறும் என்னுரை'' என்

னும் அவர்தம் கூற்றுனே கொள்ளக்கிடந்தது. இவர் ஆசிரிய ரோடு நன்கு பழகித் தேம்பாவணியை நன்கு கற்றவராகலா னும், 'குரு எப்படியோ சீஷனும் அப்படி' எனும் மொழிக்கு இயைந்தவராகலானும், பாயிரம் 12-ம் செய்யுளில் ஆசிரியர் அறைந்த உவமையையே இவண் எடுத்தாண்டனர். தவிர, "வண்டமிழான் புறநிலைக் காப்பியமாகவும், அறநிலைக் காப்பிய மாகவும் வீரமாமுனிவர் தந்த நூலின் தென்மலை மொழியின் சொன் மலை உச்சியேறிப் பொருணலம் காணும் திறமில் லார்க்கு யான் அம்மலையினின்று கொணர்ந்தெனை, யாப்பு அரும் பயன்விரித்த உரை இது" என்றமையால், தேம்பாவணி உரை நடை கல்வாத காப்பியம் என்றும், அதன் பொருளுச்சி காண்பது எல்லோர்க்கும் எளிதன்று என்றும் யாப்பரும் பயன் யாவரும் காணவேண்டியே இவ்வுரை எழுந்தது என் றும் அம்மாணுக்கன் தெளிவுறுத்துவானுயினன்.

8. இவ்வுரை வீரமாமுனிவர் மொழிந்ததன்று என்ப தற்குப் பல அகச் சான்றுகளும் உள. கருணையன் காட்சிப் படலத்து முதற் செய்யுளின் உரையின்கண் "கருணையன் ஆர் என்றும், அவன் அக்கொலையில் அகப்படாமையான் மரி யும் சூசையும் மிக்க மகிழ்ச்சியை அடைவதற்குக் காரணம் ஏது என்றும் காட்டத் துடங்கினுர்" என்று கூறி, உரையா சிரியர் வேறு என்பது பெறப்பட்டது. அடுத்த செய்யுளின் உரைமுடிவில் "என்றுர் என்க" என்று உரைமுடிவு கொண்ட டமையும் இதற்கு மற்றோர் சான்றுகும். 12-ம் செய்யுளின் உரை முடிவிலும் "என்றுன் என்க" என்று செய்யுளாசிரிய னைச் சுட்டினுர். பிரிந்த மகவைக் காண் படலத்து, 93-ம் செய்யுளின் உரை முடிவிலும், "என்றுன் என்க" எனும் சொற்கள் உள. புரோகிதப் படலத்து முப்பதாம் செய்யு ளின் உரை முடிவில் 'பாடினவன் இத்தாலிய நாட்டிற் பிறந் தவனுகையில் எனை யீன்ற இத்தாலியநாடென்றுன் என்க' என்று உரையாசிரியர் கூறிய கூற்றுக்கள், செய்யுளாசிரியன் இத்தாலிய நாட்டினன் என்றும், உரையாசிரியர் அவரின் வேறுனவர் என்றும், அவர் இந் நாட்டினரே என்றும், இந் நாட்டினராயின் ஆக்கியோனது மாணவரே என்றும்

தெற்றென விளங்குகிறது. எனவே, தேம்பாவணியின் பொழிப்புரை வீரமாமுனிவரால் வரையப்பெற்றதன்றுஎன்று ஒரு தலையாக உரைக்கற்பாலது.

தேம்பாவணிக்கு ஆசிரியர் காலத்திலேயே உரை எழுந்தது உண்மையாதலின், மூலச் செய்யுள் ஏடுகளுக் கிடையே ஒன்றன்பின்னென்றாக உரை யேடுகளும் செருகப் பெற்றமையால், மூலமும் உரையும் ஒன்றய்க் கலந்து போக செய்யுளாசிரியரே உரையாசிரியர் என்று பலரும் கூறுவதற் கான ஏது நிகழ்ந்திருத்தற்பாலதென உன்னுகின்றேம். ஆனால் உரையை உள்ளந் தெளியப் படித்துணருங்கால், இக் கட்டுரையிற் காட்டிய பல காரணங்களாலும் ஊன்றிப் படிக்கின் இன்னமும் காணப்படவிருக்கும் ஏதுக்களாலும், அவ்வுரை காவியம் ஆக்கியோனது உரையன்று என்பது தெள்ளிதிற் புலனாவது திண்ணம், திண்ணம்.